Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor:* P. B. ANNANGARACHARYA, L. KANCHEEPURAM

# ஸ்ரீ ராமாநுஜன் 216

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரு. 5 ஜீவியச் சந்தா ரு. 116.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி * —ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

15—11—1966ல் வெளியிட்டது.

# P. B. அண்ணங்கராசார்யர் பதிப்பித்த முக்கிய நூல்களுக்கு

## அகராதி வரிசையில் ஜாபிதா

ஸ்ரீ எழுத்தை முதலில் கொண்ட நூல்கள்

| | ரூ. | பை. |
|---|---|---|
| 1. ஸ்ரீ குணரத்நகோச விரிவுரை | 2 | 00 |
| 2. ஸ்ரீ சைலேசமந்த்ர ப்ரபாவம் | 1 | 00 |
| 3. ஸ்ரீவரவரமுனிதண்டகம்உரையுடன் | 1 | 00 |
| 4. ஸ்ரீ வரவரமுனி ஸ்தோத்ரங்கள் | 1 | 00 |
| 5. ஸ்ரீவேங்கடநாதஸ்தோத்ரம்உரையுடன் | 0 | 75 |
| 6. ஸ்ரீ மஹாவிஷ்ணு ஸாம்ராஜ்யம் | 1 | 00 |
| 7. ஸ்ரீ ரங்கராஜஸ்தவ வியாக்யானம் | 4 | 00 |
| 8. ஸ்ரீ ரங்க ஸ்ரீः (வடமொழியிலும்) | 1 | 00 |
| 9. ஸ்ரீ ராமாநுஜ பூஷணம் | 1 | 00 |
| 10. ஸ்ரீ ராமாநுஜ ஜயந்தி மலர் | 1 | 00 |
| 11. ஸ்ரீ ராமாயண ரஸ்யரஹஸ்யம் | 0 | 75 |
| 12. ஸ்ரீ ராமாயண ஸௌரபம் | 1 | 00 |
| 13. ஸ்ரீலோகாசார்ய ஸ்துதி-உரையுடன் | 0 | 75 |
| 14. ஸ்ரீ வசனபூஷண ஸாரம் | 2 | 00 |
| 15. ஸ்ரீ வைஷ்ணவ மஹாநிதி | 1 | 00 |
| 16. ஸ்ரீ வைஷ்ணவ ஸௌபாக்யம் | 1 | 00 |
| 17. அத்திகிரி வைபவம் | 0 | 75 |
| 18. அத்புத சக்தி | 0 | 75 |
| 19. அத்புதோபந்யாஸ மாலை | 1 | 50 |
| 20. அத்யாபக ஹஸ்த பூஷணம் | 1 | 25 |
| 21. அபூர்வ ராமாயணம் | 1 | 50 |
| 22. ஷை ஆங்கிலத்தில் | 1 | 25 |
| 23. அழகியசிங்கர் ப்ரபாவம் | 1 | 00 |
| 24. அழுகையும் அழச்செய்கையும் | 0 | 75 |
| 25. அஷ்டாதசாஷ்டாதச மஹார்த்த நிதி (324 உபந்யாஸங்கள்) | 3 | 00 |
| 26. அறுபத்திரண்டு உபந்யாஸ மாலை | 2 | 00 |
| 27. அறுபத்திரண்டு வார்த்தா மாலை | 2 | 00 |
| 28. அறுபத்துமூன்று உபந்யாஸ மாலை | 2 | 00 |
| 29. ஆச்சான்பிள்ளை யஷ்டாத்யாயி | 1 | 50 |
| 30. ஆச்சான்பிள்ளையாறு ரஹஸ்யம் | 1 | 00 |
| 31. ஆசார்யசிஷ்ய ஸம்வாத கண்டனம் | 1 | 00 |
| 32. ஆசார்யஹ்ருதயப் பதவுரை | 4 | 00 |
| 33. ஆசார்யஹ்ருதயம் பாடபரிஷ்காரம் | 1 | 00 |
| 34. ஆர்த்திப்பிரபந்தவுரைமுதலானவை | 2 | 50 |
| 35. ஆழ்வார்கள் உகந்த ராமன் / ஆழ்வார்கள் புகழ்ந்த கண்ணன் | 1 | 25 |
| 36. ஆழ்வார்கள் வைபவம் | 1 | 00 |

| | ரூ. | பை. |
|---|---|---|
| 37. ஆழ்வார்களின் கால நிர்ணயம் | 1 | 00 |
| ஷை ஆங்கிலம் | 1 | 00 |
| 38. இயற்பா ஆயிரமும் தீபிகை யுரை | 15 | 00 |
| 39. உபதேச ரத்தின மாலை உரை | 1 | 00 |
| 40. உபந்யாஸ சதத்வயம் | 4 | 00 |
| 41. உபந்யாஸ ஸப்தகம் | 1 | 00 |
| 42. உள்ளுறை பொருள் விளக்கு | 1 | 50 |
| 43. எம்பெருமானார் தரிசனம் / எம்பெருமானார் வைபவம் | 1 | 50 |
| 44. எம்பெருமானாரறுபத்திரண்டு | 1 | 50 |
| 45. எழுபத்துநான்குவிருந்து | 1 | 25 |
| 46. ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலை | 2 | 25 |
| 47. ஐப்பசித் திருமூல மலர் | 1 | 50 |
| 48. ஐப்பசித் திருமூல நன்னாட்சிறப்பு | 1 | 00 |
| 49. ஒருமிதுனமே உத்தேச்யம் | 0 | 75 |
| 50. கண்டீரவாவதார காரண நிரூபணம் | 0 | 75 |
| 51. கம்பர்கண்ட கண்டீரவம் | 0 | 75 |
| 52. கம்பரின்பக்கவித்திரட்டு | 2 | 00 |
| 53. கூரத்தாழ்வான் வைபவம் | 0 | 75 |
| 54. கோதாஸ்துதி யுரை முதலியன | 1 | 00 |
| 55. கோதை தமிழ்ச்சுவை யமுதம் | 1 | 00 |
| 56. கோதை போலுமாராய்ச்சி | 1 | 50 |
| 57. க்ஷேத்ர தீர்த்த யாத்திரை விளக்கு | 1 | 00 |
| 58. சங்கத் தமிழ்மாலை முப்பது | 1 | 00 |
| 59. சதபூஷணி வஜ்ரகுடாரம் | 1 | 00 |
| 60. சதபூஷணீ வஜ்ரகுடார ஸாரம் | 1 | 00 |
| 61. சரம ச்லோகார்த்த ஸாரம் | 1 | 00 |
| 62. சரணாகதி ஸாம்ராஜ்யம் | 0 | 75 |
| 63. சாடுச்லோக சதகம் உரை | 1 | 00 |
| 64. சாரீரக மீமாம்ஸை | 1 | 00 |
| 65. சிங்கப்பெருமாள்திருவாக்குவெற்றி | 3 | 00 |
| 66. சேஷாவதாரச் சிறப்பு | 0 | 75 |
| 67. ஜகதப்யுதயைக மூலம் | 1 | 00 |
| 68. ஜகதாசார்ய ஸூக்திஸுதாநிதி | 1 | 00 |
| 69. ஞானஸார உரை முதலியன | 1 | 50 |
| 70. தசாவதாரஸ்தோத்ரஉரைமுதலியன | 1 | 50 |
| 71. தத்வத்ரய ஸாரம் | 1 | 50 |
| 72. தத்வஹிதோபதேசம் | 1 | 00 |
| 73. தத்வார்த்த பூஷணம் | 1 | 00 |
| 74. தானேயெழுதிய தன் சரிதை | 3 | 00 |

''தொண்டே செய்து என்றும் தொழுது வழியொழுக
பண்டே பரமன் பணித்த பணி வகையே.''

—நம்மாழ்வார்




மலர் : 2 இதழ் : 7 டிசம்பர் 1987 ஆசிரியர் : சே.ரா. துணை : சுராஜ்

# அறநெறியும் ஆன்மிகமும்

கல்வி அறிவே மனிதனை மற்றைய உயிர்களிடமிருந்து வேறு படுத்துகிறது. அறிவியலும், தொழில் நுட்பமும் மட்டுமே இன்றைய கல்வியில் முக்கிய இடம் பெறுகின்றன.

அரிய சாதனைகளைப் புரிய ஏராளமான கம்ப்யூடர்களை மனிதன் உருவாக்கலாம். உயிருள்ள ஒரு மனிதக் குழந்தையை அன்புள்ள பண்புடைய மனிதனாக உருவாக்க எத்தனை கம்ப்யூடர்கள் முயன்றாலும் முடியாது.

மனித இயல், அவனது அகவாழ்வு, ஆன்மிக உணர்வுகளையொட்டியது.

அன்பின் வழியது உயிர்நிலை என்பதை மறந்து அறிவியல் தொழில் நுட்பச் சாதனைகள் எத்தனை புரிந்தாலும் உலகில் அமைதி நிலவாது; வானவெளி, அணு ஆயுதப் போர்களே மூளும்.

ஆன்மிகத்துறையிலும் மூட நம்பிக்கைகள், போலிகள், மதவெறி, குப்பைப் புராணங்கள், குருட்டுச் சடங்குகள், மலிந்துள்ளன.

ஆன்மிக உணர்வற்ற அறநெறிகள், ஏடுகளில் தங்கிவிட்டன; அறநெறி உணர்வற்ற ஆன்மிகம் ஊழல்களின் உறைவிடமாகக் காட்சியளிக்கின்றன!

இதன்விளைவாக இன்று பல கோயில்களில் அரசியல் பூனைகளும் மடங்களில் சுய நலப் பெருச்சாளிகளும் புகுந்து விட்டன!

இந்தப் பூனைகள், பெருச்சாளிகளை அகற்ற உண்மை அறநெறியாளரும் ஆன்மிகவாதிகளும் இணைந்து சிந்திக்க வேண்டும். இத்தகைய சிந்தனைக்கு உறுதுணை நிற்க வல்லது திருக்குறள் காட்டும் அறநெறியும், திருவாய் மொழி ஊட்டும் ஆன்மிக உணர்வுமே

# நெஞ்சுக்கு நீதி

ஆசுகவி. ஆராவமுதன்

தென்குருகூர் வந்துதித்த நாதன்—இன்பத்
திருவாய் மொழிகொடுத்த வேதன்—நெஞ்சில்
தித்தித்தி ருக்கும்சுகம்
நித்த, நித் தங் கொடுக்கும்
மனமே—அநு
தினமே!

நாரணன் ஸ்ரீ பிராட்டிமுதல் தொடங்கும்—கோவல்
நல்லகுரு ஜீயர்வரை அடங்கும்—பல
நாதமுனி பூதூர் யதி
வேதமுனி ஆதிகுரு
தொடரே—தீர்க்கும்
இடரே!

பண்டை யெதி ராஜனெழில் காட்ட—ஞால
பரவுத ரிசனத்தைக் கூட்ட—எழில்
பரம ரகசியம் சொல்
வரவர மாமுனிவன்
பதமே— தரும்
இதமே!

லோகக் குருபெருமை வசனம்—கற்ருல்
ருசிக்க முடியாதொரு விசனம்—நுட்ப
ஆழ்வா ரிதயம் சொல்லும்
அழகிய நாயனரின்
சந்தம்—ஆ
நந்தம்!

நம்பிள்ளைக் கீடாய் ஒரு ஈடு—இந்த
நானிலத்தி லில்லையெனப் பாடு—கேட்டு
நம்பெருமாள் கண்டசுகம்
நாடு சுகம் தேடு சுகம்
கிட்டும்—திசை
யெட்டும்!

எங்கும் ஸ்ரீ வைஷ்ணவமே பேச்சு!—என்னும்
ஏற்றம் தருவதே நம் மூச்சு!—வான
இனிய பரமபதம்
இகத்தில்தி ளைத்திட நீ
வருவாய் சுகம்
பெறுவாய்.

பதின்மர்செந் தமிழ்மனமே பாடு—அந்தப்
பண்ணில் இருக்கும்மேல் வீடு—நித்தம்
பாடி குதித்தே ஆடி
கூடி குலவு சுகம்
தீண்டு—பவம்
தாண்டு.

அடியா ரதுமதுரக் கூட்டம்—அதில்
அண்டி இருப்பது நாட்டம்—என
கண்ணன் கழலிணையில்
கண்வைத் திருந்திடுவாய்
இகமே—பர
சுகமே!

—(திருக்கோவலூர் வைணவ மாநாட்டுக் கவியரங்கில் கவிஞர் பாடிய பாடலின் ஒரு பகுதி)

# "கார்த்திகையில் கார்த்திகை நாள் காண்"

திருக்கண்ணபுரம் எஸ். ஸ்ரீனிவாஸன்

மண்ணியில் நீர் தேங்கும் குறையலூரில் அவதரித்த சீர்க்கலியன், புல மங்கை குல வேந்தன் ஆவர். ஆகையால் அவர் ஆசை வாய்ச் சென்ற சிந்தையராய் ஐம்புலன்களுக்கு வசப்பட்டு தேக சுகத்தில் திளைத்து இருந்தார். "சூதினைப் பெருக்கி, களவினைத் துணிந்து சுரிகுழல் மடந்தையர் திறத்துக் காதலே மிகுத்துக் கண்டவா திரிந்த தொண்டனேன், சாந்தேந்து மென்முலையார் தடந்தோள் புணர் இன்ப வெள்ளத் தாழ்ந்தேன்" என்று இவர் அருளிய பெரிய திருமொழியில் ஆங்காங்கே வருதல் தெளிவு தரும்.

வேத சாத்திரங்களைக் காட்டி இவரை திருத்த வொண்ணுதென்று எண்ணம் கொண்ட அண்டர்கோன் இவரது சுவையுணர்வே (ராஸிக்யமே) பற்றுசாகத் தனது திருமேனி வடிவழகை காட்டித்திருத்த, ஆழ்வாரும் அதில் நெஞ்சைப் பறிகொடுத்துக் "காவிபோல் வண்ணர் வந்து என் கண்ணுள்ளே தோன்றினுரே ; உன் சேவடி அன்றி நயவேன்" என்று பாடினுர்.

இந்நிலை இவ்வாழ்வாருக்கு நிலைத்து இருக்கவேணும் என்று கருதிய பெருமான் தன்னேடுள்ள ஒழிக்க ஒழியாத உறவு பற்றிய உணர்வை (சம்பந்த ஞானத்தை) ஏற்படுத்தி, திருமந்திர அர்த்தத்தை உபதேசம் செய்து, அர்ச்சாவதார திவ்ய தேசங்களைக் காட்டிக் கொடுக்க, பரக்க அனுபவித்தார் பெரிய திருமொழியில்.

சம்சாரபந்தத்தைவெறுத்து, 'பணியாய், அருளாய்' என்று வானுலகை ஆசைப்பட, பசியால் அழுகின்ற குழந்தைக்கு, நல்ல பசி எடுத்த பின்னரே பால் தரும் தாயைப் போல எம்பெருமான் தயங்கினுன்; தாகவிடாய் கொண்டவன் தடாகம் கண்டவுடன் இறங்கி, நீர்ப்பருகுமாப்போலே, ஆழ்வாரும் அவனை நினைந்தும், வாழ்த்தியும், வணங்கியும், வாரிப்பருகுகிறுர் திருக்குறுந்தாண்டகத்தில்.

சிறிது நீர் பருகியவுடன் தாகம் அடங்காமல், அதிகரிப்பதுபோல் ஆழ்வாருக்கு, அவா அதிகரிக்க, திருஎழுகூற்றிருக்கையில், "பணிவன்" என்று ஆர்த்தராய் ஆராவமுதாழ்வான் திருவடிகளில் சரணம் புகுகிறுர். சரணம் புகுந்தும், பணியாதிருந்த கடல் அரையன் மேல் சினம்கொண்ட இராமன் போல், இவரும் சரணுகதி பலியாமையால், மடல் ஊர்கிறுர் அவதாரங்களில் நீர்மையை அழிக்கிறேன் என்று சிறிய திருமடலில். சிறிய அஸ்திரம் பயன் இன்றி போகுமேல், பெரிய அஸ்திரம் விடுவது போல் அர்ச்சாவதார நீர்மையை அழிக்க முற்படுகிறுர் பெரிய திருமடலில்.

ஆழ்வாரைக் கொண்டு இன்னும் அரிய பிரபந்தங்கள் வெளியிட வேண்டும் என்ற எண்ணத்தால், சரணுகதி செய்த பிறகும் பாராது இருந்த பெருமான் திருநெடுந்தாண்டகத்தில் ஆழ்வார் இச்சையைத் தலைக்கட்டினுன். ஆழ்வார் "திருப் பிரிதி" தொடங்கி, "தான் உகந்த ஊரெல்லாம் தன் தாள் பாடி", அனுபவித்து வருகையில், "திருக்கண்ண மங்கை நின்றவனை" கண்ணனுகக் கண்டு கொண்டு, அனுபவித்து, "கற்கலாம் கவியின் பொருள்" என்று அப்பதிகத்தை முடிக்கக்கண்டு அவ்வூர் எம்பெருமான், அர்த்தம் கேட்கவேணும் என்ற அவாவினுல் ஆழ்வார் தோன்றிய நாளில், அவரையே நம்பிள்ளையாக அவதரிக்கச் செய்து, தான் "ஆவணி ரோகிணியில்"

பெரிய வாச்சான் பிள்ளையாக அவதரித்து, நம்பிள்ளை திருவடி வாரத்தில், அர்த்தங்களைக் கேட்டு, "பொய் மொழி ஒன்றில்லாத மெய்மையாளன்" அம்மொழியை மெய்பித்தான்.

திருவரங்கத்திற்குத் தெற்கே உள்ள நம்பூரில் அவதரித்தவர் வரதன். இவர் முத்துப்போல் எழுதக்கண்ட நஞ்சீயர், தம் உரைநூல் ஒன்பதினுயிரப்படியை, ஓலைப் படுத்த இவரிடம் கொடுத்தார். காவிரி கடந்தபோது அந்நூலை வெள்ளத்தில் பறி கொடுத்து, பின் திருவரங்கன் அருள்மொழி கேட்டு எழுதிய ஓலை தன்னை, நஞ்சீயர் பார்த்துப் பரவசம் அடைந்து, தர்ப்பை நுனி போல் அறிவுக் கூர்மையும், குணுதிசயங்களையும் கண்டு 'நம்பிள்ளையோ' என்று தழுவிய அன்றுமுதல் அப்பெயரே வரதருக்கு நிலைத்தது.

"வேர்த்த போது குளித்தும், பசித்த போது புசித்தும் பட்டர் திருவடிகளே சரணம் என்று இருந்தால், பரமபதத்தில் தள்ளுவார் உண்டோ" என்று இருந்த நஞ்சீயர் போல், இவரும் அவர்பால் இரவும் பகலும் பிரியாது, முன்னும் பின்னும் அகலாது தேவு மற்று அறியாது இருந்தார்.

திருவாய்மொழிக்கு நூறு உரு அர்த்தங்கள் நிர்வகித்த நஞ்சீயருக்கு சதாபிஷேகம் செய்து வைத்தவர். நஞ்சீயரால் "திருக்கலி கன்றி தாஸர்" என்றும் பின், கந்தாடை தோழப்பரால் "லோகாசாரியர்" என்றும் பெயர்கள் சூட்டப் பெற்றார். இவர் தென் சொல் கடந்து, வட சொற் கடலுக்கு எல்லை கண்டவர்.

கூரத்தாழ்வான் திருப்பேரனுரான, நடுவில் திருவீதிபிள்ளைபட்டருக்கு, தினமும் தனியே நம்பிள்ளை, திருவாய்மொழி அர்த்தங்களைச் சாதிக்க, பகலில் கேட்ட அர்த்தங்களை சுவடிகளில் தரித்து, நம்பிள்ளையிடம் காட்ட, அது மகாபாரதம் போல் இலட்சத்து இருபத்தையாயிரம் கிரந்தங்களாய் இருக்கக் கண்ட நம்பிள்ளை, பட்டரைப் பார்த்து, "திருவாய்மொழி நிமித்தமாக நாம் வாக்கால் சொன்னதை எழுதினீராகில், நம் மனதிலே தங்கியிருக்கும் விசேடார்த்தங்களை எல்லாம் எழுதப்பெற்றீரோ" என்று அருளிச் செய்தார்.

இவ்வாறு தாமே கூறுவாராயின் கல்வியில் இப்பெரியாருக்கு "வீறு" இருந்தவாறு என்னே!

இச்சிறப்பினை நோக்கியே, "இந்திரன், நான்முகன், ஈசன், கந்தன் வார்த்தைகளை யார் கற்பார் இக்காசினியில், நம்பூர் வரதர் தம் மாளிகையில் சிந்தின சொற்கள் சில நாடி திறைக் கொள்வாரே" என்று பாடல் எழுந்தது போலும்!

"ஆத்மாவிற்கு, சரீர விச்லேஷம் (பிரிவு) பிறந்தால் பரமபதம் சித்தம்" என்று அறுதியிட்டு, இருப்பது எவ்வர்த்தத்தாலே என்று ஒருவர் கேட்க, அதற்கு,

திருமகள் கேள்வனை உபாய, உபேயம் என்று அறுதியிட்டு இருப்பது, இழந்த பொருளைக் காட்டித்தந்த ஆசாரியனை அகலாதிருப்பது, அருளிச் செய்த ஸ்ரீபாஷ்யத்தின் படியே எம்பெருமானுர் தரிசன ஸ்தாபனம் பண்ணுவது, ஆழ்வார்கள் அருளிச் செயல்களாலே போது போக்குவது, இவை உண்டானுல், "மீட்சியின்றி வைகுந்த மாநகர் மற்றது கையதுவே", என்றபடியே பரமபதம் சித்தம், சந்தேகிக்க வேண்டா" என்று அருளி செய்தார் நம்பிள்ளை. இவருடைய சிறப்புகளைக் கூறப்புகில் மிக விரியும்.

திருமங்கை ஆழ்வாரும், நம்பிள்ளையும் அவதரித்த கார்த்திகையில் கார்த்திகை நாள் கண்டுகொண்டு காதலித்து அன்னவர்களின் அருளுக்கு இலக்காவோம்?

# நம் பிள்ளை

—நம்பி—

நம் பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை
என்பர்—அவரவர் தம் ஏற்றத்தால்—அன்புடையோர்
சாற்று திருநாமங்கள் தானென்று நன்னெஞ்சே!
ஏத்ததனைச் சொல்லி நீ இன்று.

ஸ்ரீவைஷ்ணவத் தலைநகர் ஸ்ரீரங்கத்தில் திருவிழா நாட்களில் பெருந்திரளாகக் கூடிக் கலையும் அடியார் குழாம் அவ்வப்போது நிகழும். கலைந்து செல்லும் அடியார் குழாத்தினரைக் காண்போர், இது நம்பெருமாள் கோஷ்டியோ, நம்பிள்ளை கோஷ்டியோ? என்று வியந்து கேட்பராம்.

பெருந்திரளாக அடியார் கூட்டத்தை உரை நயத்தால் அரங்கன் கோயிலில் கூட்டி மகிழ்வித்த நாவீறு கொண்டவர் நம்பூர் வரதராஜர்.

திருவரங்கம் பெரிய கோயிலில் தொட்டிலிட்டு வளர்த்தவர் கூரத்தாழ்வான் குமாரர் பட்டர். மேதை மிக்க பட்டர் அருளிச் செயல் உரையாற்றுவதிலும், ரகசிய நூல் வெளியீட்டிலும் ஸ்ரீவைஷ்ணவ குரு பரம்பரையில் சிறந்த முன்னோடியாகத் திகழ்ந்தவர்.

பட்டரின் சிஷ்யர் நஞ்சீயர். வேதாந்தியாக விளங்கி பின்னர் ஸ்ரீவைஷ்ணவ ஆசிரியராகத் திருந்திய நஞ்சீயர் அருளிச் செயலில் ஈடுபாடு மிகுந்து, திருவாய்மொழியைக் காத்த குணவாளராகத் திகழ்ந்தவர்.

எம்பெருமானர் நியமனப்படி திருக்குருகைப் பிரான் பிள்ளான் திருவாய்மொழிக்கு இன்பமிகு ஆறுயிரப்படி உரை இயற்றினர். அதையடுத்து மேலும் அழகியதோர் உரையை ஒன்பதினாயிரம் கிரந்தங்களில் இயற்றியவர் நஞ்சீயர்.

"தஞ்சீரை ஞானியர்கள் தாம் புகழும் வேதாந்தி
நஞ்சீயர் தாம் பட்டர் நல்லருளால்—எஞ்சாத
ஆர்வமுடன் மாறன் மறைப்பொருளை ஆய்ந்துரைத்தது
ஏரொன்பதினாயிரம்"

என்பார் மாமுனிகள்.

"ஆய்ந்து உரைத்தது" என்னும் அடைமொழி பெற்றது இவ்வுரை. ஆசார்யரான பட்டரிடமும், அவரது சிஷ்யர் நஞ்சீயரிடமும் திருவாய்மொழியின் மாண் பொருளை மாந்தியவர் நம்பிள்ளை.

நஞ்சீயரின் காலட்சேப கோஷ்டியில் நீறு பூத்த நெருப்பென அடக்கத்தோடு விளங்கியவர் நம்பூர் வரதராஜன்.

நஞ்சீயர் பட்டர் நியமனப்படி ஒன்பதினாயிரம் கிரந்தங்கள் கொண்ட திருவாய்மொழி உரையை இயற்றி அதனை செவ்வையாகப் பட்டோலை கொள்ள ஆள் தேடினர்.

நம்பூர் வரதராஜன் கையெழுத்து அழகாக உள்ளது; திருவாய்மொழிப் பொருளில் தெளிவும் தேர்ச்சியும் பெற்றவர் என்பது அறிந்து நஞ்சீயரிடம் ஓலை எழுதும் பொறுப்பை ஒப்படைத்தார். அரங்கத்திலிருந்து ஓலைக் குறிப்புடன் ஊர் திரும்பிய வரதன், காவிரியில் வெள்ளம் மிகுந்ததால் நீந்திச்செல்ல நேர்ந்தது. கையில் இருந்த

ஓலைக் குறிப்புகள் கைநழுவி ஆற்று வெள்ளத்தில் அடித்துச் சென்றன. அஞ்சி நடுங்கினார் வரதன்.

ஒருவாறு ஆசான் அருளை மனத்தில் இருத்தி தான் அவர்பால் கேட்ட செழும் பொருளைத் தொகுத்து எழுதி நஞ்சீயர் திருவடிகளில் கொண்டு வைத்தார்.

''நாம் கொடுத்த ஏடு எங்கே'' என வினவினார் நஞ்சீயர். நடந்ததைக் கூறினார் நம்பிள்ளை.

நஞ்சீயர் ஏடுகளைப் பிரித்து எழுத்துக்களைப் படித்தார்; தாம் ஆற்றிய அரும் பொருள்கள் மட்டுமின்றி, பட்டரின் மேதை மிக்க கருத்துக்களையும் மேலும் அழகுபட அதில் கண்டார். மகிழ்ச்சி பொங்க ''வாரீர் நம்முடைய பிள்ளையே'' என்று வாரி எடுத்து அணைத்தார்; வரதராஜன் இவ்வாறு 'நம் பிள்ளை' ஆனார்.

நம்பிள்ளையின் பெருமை துலங்க, அவரது இருகண்கள் போன்ற பெரிய வாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை இருவரையும் நோக்கினால் போதும்.

அருளிச் செயல் நாலாயிரத்துக்கும் உரை நூல் இயற்றி, ''வியாக்யான சக்கரவர்த்தி'' என்ற விருது பெற்றவர் பெரியவாச்சான் பிள்ளை.

பெரிய திருமொழி (5-8-7) உரையில் ''ஓது வாய்மையும் உவனியப் பிறப்பும் உனக்கு முன் தந்த அந்தணன் ஒருவன்'' என்றவிடத்து,

''முற்பட துவயத்தைக் கேட்டு, இதிஹாஸ புராணங்களையும் அதிகரித்து (கற்று) பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்துக்கு (எதிரிகள் வாய் மடங்க) உடலாக நியாய மீமாம்சைகளும் அதிகரித்து, போது போக்கும் அருளிச் செயலிலே யாம் நம் பிள்ளையைப் போல'' என்று தம் ஆசாரியரை நமக்கு அறிமுகப் படுத்துகிறார் வியாக்யான சக்கரவர்த்தி.

''லோகாசார்யன்'' (உலக ஆசிரியர்) என்னும் திருநாமமும் பெற்றவர் நம்பிள்ளையே. நம் பிள்ளையின் சீரும் சிறப்பும் திருவரங்கத்தில் மேலோங்கி நின்றது!

அப்போது முதலியாண்டானின் திருப்பேரரான கந்தாடை தோழப்பர், நம்பிள்ளையிடம் பொறாமையுற்று அவரை வசைபாடினார்; அது கண்ட தோழப்பர் மனைவி, அபசாரப்பட்ட கணவனை நோக்கி, ''உமக்கு உய்வுண்டோ, என்செய்தீர்!'' எனப் பதறினாள்.

தோழப்பர் தவறுணர்ந்தார். அன்றிரவே நம்பிள்ளையிடம் மன்னிப்புக் கேட்க திருமாளிகையிலிருந்து புறப்பட்டார். அதற்குள் நம்பிள்ளை தாமே, தோழப்பர் இல்லத்துக்கு வந்து, வேரற்ற மரம்போல், அவரது திருவடிகளில் விழுந்து ''தேவரீர் திருவுள்ளம் கன்றும்படி அடியேன் இருந்துவிட்ட பிழையை தேவரீர் மன்னித்தருள வேண்டும்' என்று தம்நிலைக்கு வருந்தி நின்றார்.

பண்பின் உச்சியில் ஏறி, பணிவுடன் தன் முன் நின்ற நம்பிள்ளையைக் கண்ட தோழப்பர் வியப்பு மிக எய்தி, ''ஸ்வாமீ! தேவரீரை இத்தனை நாளும் ஸ்ரீ ரங்கவாஸிகளான சிலருக்கு மட்டும் ஆசார்யராக எண்ணியிருந்தேன்; இப்போது உலகுக்கே ஆசார்யர் நீர் என்பதைத் திண்ணமாக அறிந்தேன்'' என்றார்.

''துன்னு புகழ் கந்தாடை தோழப்பர் தம் உகப்பால்
என்ன உலகாரியனோ என்று உரைக்க பின்னை
உலகாரியனெனும் பேர் நம்பிள்ளைக்கு ஓங்கி
விலகாமல் நின்றது என்றும் மேல்''.

நம் பிள்ளையின் அறிவுக் கூர்மை, உரைத்திறன், அனுபவப் பெருமை, குண மேன்மை அனைத்தும் கூற இச்சிறு கட்டுரை இடம் தராது.

''தெள்ளியதாம் நம்பிள்ளை செப்புநெறி தன்னை
வள்ளல் வடக்குத் திருவீதிப்பிள்ளை— இந்த
நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்தது
ஈடு முப்பத்தாறுயிரம்''

என்று மாறன் — நம்மாழ்வார் மறைப்பொருள் விளக்கத்துக்கு, குன்றிலிட்ட விளக்காய்த் தோன்றுபவர் நம்பிள்ளை, கார்த்திகையில் கார்த்திகை நாளில், கலியன் ஒலிமாலை ஓதி நம்பிள்ளையாகிற அறிவுத் திருவிளக்கை ஏற்றிப் போற்றி மகிழ்வோமாக!

# பகவானைச் சேவிக்கும் முறை

வித்வான். காழியூர் ஸ்ரீ ராம அய்யங்கார்

அதிகாலையில் ரிஷிகள் துயில்விட்டு எழுமாப் போல குரங்குகளும் எழுந்து சுனைகளில் குளித்து, அங்குள்ள பூக்களைப் பறித்து அப்பன் திருவடிகளில் ஸமர்ப்பித்துத் தோத்திரம் செய்கின்றன. நெஞ்சே! நீயும் அப்படிச் செய்யப்புறப்படுவாயாக'' என்று பூதத்தாழ்வார், ''போதறிந்து வானரங்கள் பூஞ்சுனைபுக்கு, ஆங்கலர்ந்த போதரிந்து கொண்டேத்தும்போது, உள்ளம் போது மணி வேங்கடவன் மலரடிக்கே செல்ல, அணி வேங்கடவன் பேராய்ந்து'' என்ற பாட்டில் தெரிவிக்கிறார்.

பேயாழ்வாரும் புகுமதத்தால் வாய்பூசிக் கீழ் தாழ்ந்து, அருவியுகு மதத்தால், கால் கழுவிக் கையால் மிகுமதத்தேன் விண்ட மலர் கொண்டு விறல் வேங்கடவனையே கண்டு வணங்கும் களிறு'' என்ற பாட்டில், திருமலையில் யானையானது மண்டை, கன்னம் இவைகளினின்று பெருகுகின்ற மத ஜலத்தால், வாய் கொப்பளித்துக் கால்களை சுத்தி செய்து, துதிக்கையால் பூவை பறித்துத் ' திருமலையப்பனையே சேவித்து வணங்குகின்றது என்று தெரிவிக்கிறார்.

எம்பெருமான் சன்னதியில் தொண்டு செய்யப் போமவர்கள் வாயைக் கொப்பளித்துக் கைகால்களை சுத்தி செய்து கொண்டு பூக்களைக் கொண்டுபோவது வழக்கம். இவ்வழக்கம் மனிதர்களுக்கு மட்டுமல்லாமல் திருமலையிலுள்ள விலங்கினங்களுக்கும் அமைந்திருக்கின்றது. ஆக, நாமும், கோவிலுக்குச் செல்லுமுன், ஸ்நானம் பண்ணி, புதிய ஆடை உடுத்துத் திருமண் இட்டுக் கொண்டு செல்ல வேண்டும். வெறுங் கையுடன் கோவிலுக்குப் போகக்கூடாது. 'ரிக்தஹஸ்தஸ்து நேபேயாத், ராஜா நம் தைவதம் குரும். ''அரசனையும் கடவுளையும் ஆசார்யனையும் வெறுங் கையனாக அணுகலாகாது'' என்ற விதியுள்ளது. இவ்விதிப்படி நாம், நம் சக்திக்கும் பக்திக்கும் இணங்க, அப்பெருமானுக்குரிய பொருள்களைக் கையில் கொண்டு செல்ல வேண்டும். ''பத்ரம், புஷ்பம் பலம் தோயம்'' என்று கண்ணன் கீதையில் அருளிச் செய்தபடி துளசியையோ, பூவையோ, பழமோ, ஜலமோ எதுவாக இருந்தாலும் சரி, பக்தியுடன் கொடுத்தால் அதைக் கொண்டு, பகவான் திருப்தியடைவான்.

பூதத்தாழ்வாரும், கோவிலுக்குப் போகும் போது, இன்ன இன்ன கொண்டு போக வேண்டும் என்று ஒரு பாட்டியல் தெரிவிக்கிறார். அப்பாட்டு பின் வருமாறு: ''வரைச் சந்தனக் குழம்பும் வால் கலனும், பட்டும், விரைப் பொலிந்த வெண் மல்லிகையும் நிரைத்துக் கொண்டு ஆதிக் கண் நின்ற அறிவனடியிணையே ஓதிப் பணிவதுறும்''.

அதாவது சிறந்த சந்தனம் திவ்யமான ஆபரணம், உயர்ந்த பீதாம்பரம். மணமுள்ள மல்லிகை மலர் ஆகிய இவற்றைக் கையில் கொண்டு சென்று பகவானுடைய திருவடிகளை வணங்குதல் நன்று என்கிறார்.

'இப்பாசுரத்திற்கு அழகிய மணவாளச்சீயர் ரசமாக, ஒரு பொருள் அருளிச்செய்வராம்: அதாவது சந்தனம் முதலியவற்றை பகவானுக்கு ஸமர்ப்பிக்கும் பொருட்டுக் கையில் கொண்டு கோவிலுக்குச் செல்ல வேணுமென்பதே இப்பாசுரத்தின் பொருளாயினும் வேறு வகையான பொருள் தொனிக்கிறது, அன்பர்கள் கோவிலிலே அருளிச் செயல் சேவிக்கும் போது அழுக்குடம்போடும், சுந்தல்துணியோடும், நாற்றத் தலையோடும் போகாமல், மெய்யிட நல்லதோர் சாந்தமும் என்கிறபடியே, உடம்பிற் சந்தனம் பூசிக் கொண்டும் ''கழுத்துப் பூணொடு காதுக்குக் குண்டலம்'' என்கிறபடியே கண்டிகை, குண்டலம், மோதிரம், முதலிய ஆபரணங்

களணிந்து கொண்டும், "உடுத்துக்களைந்த நின்பீதக ஆடையுடுத்து" என்கிறபடியே திவ்ய ஆடை உடுத்துக் கொண்டும்" தொடுத்ததுழாய் மலர் சூடிக்களைந்தன சூடுமித்தொண்டர்களோம்" என்கிறபடியே நல்ல பூக்களைச் சூடிக் கொண்டும் அருளிச் செயல் ஓதுவது நன்று" என்றும். பன்டைக் காலத்தில் பட்டர், இயல் கோஷ்டிக்கு எழுந்தருளும் போது, இவ்வகை அலங்காரங்களுடனே எழுந்தருளுவராம்.

கோவிலுக்குள் செல்லும் போது "வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" என்கிற நம்மாழ்வார் திருவாக்குப்படி ஸ்ரீவைஷ்ணவர்களை முன்னிட்டுக் கொண்டே பகவானைப் பணிதல் வேண்டும். ஸ்ரீவிபீஷணாழ்வான், ஸ்ரீராமன் அருகில் வரும் போது நேரே அவன் திருவடிகளில் விழாமல் சுக்ரீவமஹாராஜர் திருவடி முதலான வானர முதலிகளை முன்னிட்டே பெருமாளைப் பற்றினார். ஆண்டாளும், திருப்பாவையில் உறங்குகிற கோபிகளை எழுப்பிக் கொண்டு, நந்தகோபன் திருமாளிகைக்குப் போய், அங்கே, கோயில் காப்பான், வாயில் காப்பான் இவர்களின் அநுமதி பெற்று உள்ளே போவதைத் தெரிவிக்கிறாள்.

கோவிலினுள்ளே நுழைந்ததும் த்வஜஸ்தம்பத்தின் அருகில் ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் பண்ணவேண்டும். துவாரபாலகர்களின் அநுமதி பெற்று, ஆழ்வார் ஆசார்யர்களை சேவித்தும் செல்ல வேண்டும். முதலில் சேவிக்க வேண்டியது தாயார் சன்னிதி. இவ்விஷயத்தில் பேயாழ்வார் நமக்கு வழி காட்டுகிறார். 'திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்' என்று முதன் முதலில் புருஷகார பூதையான பிராட்டியைக் கண்டேன்; பிறகு பெருமாளைக்கண்டேன் என்கிறார். இவர் வேதம்வல்லவர்களான பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார் ஆகிய இவர்களை முன்னிட்டுக் கொண்டு முதன் முதலில் பிராட்டியைச் சேவித்தார்.

காரணம் நாம் எப்போதும் எம்பெருமானிடத்தில் அபசாரப்பட்டவர்களாக இருப்போம்; அவ்வபசாரத்துடன் பகவானிடம் சென்றால் அவன் கோபத்துக்கு ஆளாகும்படி நேரும். ஆகவே அபசாரப் பட்டிருக்கும் நாம் முதலில் தாயான பிராட்டியிடம் சென்று அவள் அனுக்ரஹம் பெற்று, பகவானிடம் சென்றால் பகவான் கோபங் கொள்ளமாட்டான்.

பகவான் திருமேனியை சேவிக்கும் போது முதன் முதலில் அவன் திருவடிகளைச் சேவிக்க வேண்டும். சிறு குழந்தைகள் தாயின் முலையிலே வாய் வைப்பது போல, அடியார் இழியுந்துறை திருவடியாகையாலே, நம்மாழ்வாரும், "துயரறு சுடரடி தொழுதெழு என் மனமே" என்று முதன் முதலில் திருவடிகளைத் தொழுமாறு தன் நெஞ்சிற்கு உபதேசம் பண்ணுகிறார்.

ஆண்டாளும், முதன் முதலில் 'அன்றிவ்வுலகமளந்தாய் அடிபோற்றி "திருவடிகளுக்கு மங்களா சாசனம் பண்ணுகிறாள்.

திருவடிகளைச் சேவித்தவுடன் மற்ற அவயவங்களைச் சேவிக்கவேணும், இவ்விஷயத்தில் திருப்பாணாழ்வார் வழி காட்டுகிறார். இவர் பெரிய பெருமாளை சேவிக்கும்போது முதன் முதலில் திருவடியைச் சேவிக்கிறார். பிறகு, திருப்பீதாம்பரம், ஆடைக்கு மேல் திருவுந்திக்கமலம், உதரபந்தனம் (திருவயிற்றில் சாத்தியுள்ள ஆபரணம்) திருமார்பு, கழுத்து, திருவாய், திருக்கண்கள் இவைகளைக் கிரமமாக அனுபவித்துப் பிறகு, திருமேனி முழுவதையும் அநுபவித்துத் தமது நெஞ்சு பரவசமானபடியைப் பேசுகிறார். கடைசியில், அரங்களைப் பார்த்த கண்கள் மற்ற எதையும் பார்க்காது என்கிறார். இப்படிப்பாதாதி கேசமாக ஸேவிக்கும் முறையைத் நமக்குத் தெரிவிக்கிறார்.

# ஸ்ரீ இராமாயணமும் சரணாகதியும்

ஸ்ரீ உ.வே. காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமி

புண்ணியம் சிறிதும் இருக்கக் கூடாது; அதாவது நாம் புண்ணியவான் என்ற நினைவு இருத்தல் கூடாது. புண்ணியம் பொன் விலங்கு—பாபம் இரும்பு விலங்கு. இரண்டும் பந்தத்தையே [கட்டையே] கொடுத்து மோக்ஷத்துக்குத் தடையாக நிற்கும். நாம் செய்யும் புண்ணிய கர்மத்தை, பலனை உத்தேசிக்காமல் பகவானுக்கு அர்ப்பணம் செய்து விட வேண்டும். நமக்கு நாமே ரக்ஷகம் என்றோ, பகவானைத்தவிர வேறு யாரேனும் ரக்ஷகர் என்றோ எண்ணக்கூடாது. தான் செய்திருக்கும் கர்ம, ஞான, பக்திகளோ புண்ணிய கர்மங்களோ தன்னை ரக்ஷிக்கும் என்று எண்ணுதல் கூடாது. இப்படிப்பட்ட ஒருவன் பகவானைக் கிட்டி,

“நான் அகதி (வேறு கதியில்லாதவன்), அகிஞ்சனன் (வேறு ஒரு சாதனமும் இல்லாதவன்) நீயே எனக்கு ச்ரேயஸ் (நற்கதி) கொடுக்க வேண்டும்” என்று பிரார்த்திப்பதுதான் சரணாகதி.

அஹம் அஸ்மி அபராதாநாம் ஆலய:
அகிஞ்சனோனன்யகதி: த்வமேவ
உபாயபூதோமே பவ
இதி பிரார்த்தனா மதி: சரணாகதி:

## சரண்யத்துவம்

சரண்யன் (சரணமாகப் பற்றுதற்கு உரியவன்) யார் என்பதை விளக்கவே பால காண்டம் முதல், பரக்க ஸ்ரீ ராமனுடைய கல்யாண குணங்களைச் சொல்லியிருக்கிறது ஸ்ரீ ராமாயணத்தில். சரண்யனுக்கு மேன்மையும் (பரத்வம்) இருக்க வேண்டும்; நீர்மையும் (ஸௌலப்யம்), இருக்க வேண்டும்; ரக்ஷகத்வத்துக்கு [காத்தலுக்கு] உரிய கல்யாண குணங்கள் இருக்க வேண்டும்; பரத்வம், ஸௌலப்யம், ரக்ஷகத்வம் இந்த மூன்றும் உள்ளவன் தான் சரணம் பற்றத் தகுந்தவன்.

சரண்யனுக்கு இருக்கவேண்டிய பரத்வம், ஸௌலப்யம், ரக்ஷகத்வம் இந்த மூன்றும் ஸ்ரீராமனிடம் நன்றாகப் பிரகாசித்திருக்கிறது.

## பரத்துவம் [மேன்மை]

ஸ்ரீ ராமன் பரதெய்வம்தான்; நம்மைப் போல மனுஷ்யனல்லன் என்பதை முதலில் திடமாகத் தெரிந்து கொள்ள வேண்டும். ஸ்ரீ ராமனை மனுஷ்யன் என்று நினைப்பதே பெரிய அபசாரம் (குற்றம்).

முதலில் தசரத சக்ரவர்த்தி ஒரு யாகம் செய்கிறார். அதில் தங்கள் தங்கள் அவிர்பாகத்தை (தேவ உணவு) வாங்கிப்போக, பிரம்மாவும் மற்ற தேவதைகளும் ஆகாசத்தில் வந்து குழுமினர். அப்போது “**யேதஸ்மிந் அந்தரே விஷ்ணு: உபயாதோ மஹாத்யுதி**” என்று பகவான் அவர்களின் நடுவே வந்து தோன்றுகிறான். தேவர்கள் இராவணன் கொடுமைகளைக்கூறி உலகைக் காத்தருள, பணிவுடன் பிரார்த்திக்கையில், பகவான் “பிதரம் ரோசயாமாஸ” என்று ‘தான் தசரத சக்ரவர்த்தியைப் பிதாவாக இச்சித்துப் பிறக்கிறேன்’ என்று சொல்லியிருக்கிறான் என்பது ஸ்பஷ்டம். (தெளிவு) தவிரவும்

ஸ்ரீ மஹா லக்ஷ்மியே ஸீதா பிராட்டியாக கர்ப்ப வாஸமில்லாமல் பூமியிலே ஆவிர்பவித்ததாக (தோன்றியதாக) வால்மீகி பகவான் சொல்லியிருக்கிறார். அந்த ஸீதா பிராட்டியை (மஹா லக்ஷ்மியை) கைப்பிடித்ததினாலேயே ஸ்ரீ ராமன் நாராயணன் தான் என்று தேறுகிறது.

மேலும் யுத்த காண்டத்தில் இராவண வதத்துக்குப்பிறகு, தேவதைகள் ஆகாயத்தில் தோன்றி, 'பவான் தேவோ நாராயண :'' என்று ஸ்ரீராமனைப் போற்றியிருக்கிறார்கள். இப்படி முதலிலும், நடுவிலும், முடிவிலும் ஸ்ரீராமாயணத்திலிருந்தே ஸ்ரீ ராமன் பரமாத்மாதான் என்ற உண்மை—பரத்வம்—ஸ்தாபிக்கப்படுகிறது.

## ஸௌலப்யம் (எளிமை-நீர்மை)

ஸௌலப்யம் என்பது எல்லோராலும் கிட்டலாம் படி சுலபனாயிருக்கை. அவனைக் கிட்டுமவர்கள் மனத்தில் அவனுடைய மேன்மை தோற்றாமல் புரையறக் கலத்தல் அவனது நீர்மை. ஸ்ரீ ராமனிடம் இந்த சீலம் நன்றாகப் பிரகாசித்திருக்கிறது. காட்டில் வேடன் குகன், வேடுவப்பெண் சபரி, வானரன் சுக்ரீவன் இப்படி தன்னில் தாழ்ந்தவர்களிடம் கலந்திருக்கிறான். குகனிடம், 'உகந்த தோழன் நீ' என்றும், சுக்ரீவனை 'நாதம் இச்சதி' என்றும் தனக்குத் தலைவனாக விரும்பியும், தன் மேன்மை தோற்றாது, புரையறக் கலந்திருப்பதனால், ஸ்ரீராமனிடம் இந்த ஸௌலப்யம் (எளிமை) பூர்ணமாகப் பிரகாசித்திருக்கிறது.

## ரக்ஷகத்வம் (காவல் திறன்)

பரத்துவ, ஸௌலப்யங்களைப்போலவே ரக்ஷகத்வ பூர்த்தியும் ஸ்ரீ ராமனுக்கு உண்டு. ஒருவருக்கு பரத்வமும் ஸௌலப்யமும் [மேன்மை, நீர்மைகள்] இருக்கலாம். ஆயினும் ரக்ஷிக்கத் தகுந்த குணங்கள், அதாவது வாத்ஸல்யம் (தாயன்பு) க்ருபை (கருணை) முதலியவைகளும் விரோதியை நிரஸிக்க (அழிக்க)க்கூடிய, சௌர்ய (சூரத்தனம்) எதிரி மீது தாக்கும் ஆற்றல்) வீர்ய (எதிரி தாக்குதலால் தான் குலையாமை) பராக்ரமம் (எதிரிகளை வசப்படுத்தும் திறன்) இவை இல்லாவிட்டால், சரண்யத்துவ (சரண் புகுந்தவனைக் காக்கும் திறன்) பூர்த்தியில்லை. தாடகை, தாடகையின் புதல்வர்கள் (சுபாகு மாரீசன்) வதைகளிலிருந்தும், விசுவாமித்ர யாக ரக்ஷணம், தண்டகாரண்ய ரிஷிகளைக் காத்தது, கரதூஷணாதிகளை வதம் செய்தது, வாலியைக் கொன்றது, சுக்ரீவனை ரக்ஷித்தது போன்ற செயல்களிலிருந்தும், ஸ்ரீ ராமனுக்கு ரக்ஷகத்வ பூர்த்தி முழுமையாக உண்டு என்று தெரிகிறது.

இப்படி ஸ்ரீ ராமனே எல்லா விதத்திலும் சரணமடையத்தகுந்தவன், அதாவது சரண்யத்வ பூர்த்தி பெற்றவன் என்று தேறுகிறது.

சரணாகதி என்பது விசேஷ தர்மம். சாதாரண தர்மமில்லை; ஸாதாரண தர்மத்தை விட்டாலும் விடலாம்; விசேஷ தர்மத்தை விடக்கூடாது. நமக்குப் பலவிதத்தில் துன்பத்தை உண்டுபண்ணும் சத்ருவானாலும், நம்மிடம் வந்து சரணம் புகுந்தால், நம் உயிரைக் கொடுத்தாவது நாம் அவனைக் காப்பாற்ற வேண்டும்.

ஸ்ரீரங்கத்தில் பட்டர் என்ற மஹான் யாத்திரையாக வெளியூர் எழுந்தருளினார். வழியில் சூரியன் மறைந்து இருள் சூழ்ந்தது; அங்கே ஒரு வேடன் வீடு இருந்தது. அதில் போய் இரவில் தங்கினார். அந்த வேடன் பட்டருக்கு அன்புடன் இடமளித்து உபசரித்தான். அப்போது அவர் அந்த வேடனைப் பார்த்து, 'இங்கு ஏதாவது விசேஷம் உண்டோ ?' என்று வினவினார். அதற்கு அவன், ''நான் இன்று வேட்டைக்குப் போனேன். அங்கே ஒரு முயல் குட்டியைப் பிடித்தேன். அதை எடுத்துக்கொண்டு வீட்டுக்கு வரும்போது, அந்தக்குட்டியின் தாய் என் எதிரில் வந்து தெண்டனிட்டது. அதன் குட்டியை விடுவித்து வந்தேன்'' என்றான்.

இதைக் கேட்டதும் பட்டர் ஆச்சர்யப்பட்டார். இந்த வேடனுக்கு சரணம் பற்றினவனை ரக்ஷிக்கவேண்டும் என்ற ஞானம் இல்லை. திர்யக் (ஊர்வன) சாதியைச் சேர்ந்த அந்த முயலுக்கோ சரணாகதி செய்தால் பலிக்கும் என்ற ஞானம் இல்லை. இதிலிருந்து என்ன தெரிகிறது என்றால் சரண்யனுக்கும் சரணாகதனுக்கும் தர்மத்தின் பெருமை தெரியாதிருக்கும்போதே, அந்த சரணாகதி என்கிற ''தர்மமே பலனைக் கொடுத்து விடுகிறது'' என்பதே.

(தொடரும்)



# பகவத் கீதை

## நான்காம் அத்தியாயம்

தமிழாக்கம் :

களிமாமணி புதுவயல் ந. செல்லப்பன்

'அர்ச்சுனா! உன்னை ஏமாற்றிச் சண்டையில் உற்சாகமூட்டுவதற்காக, உன்னைக் கர்ம யோகத்தில் தூண்டுகிறேன் என்று எண்ணாதே! உலகத்தைப் படைக்கும் போதே இக்கர்ம யோகத்தை நான் மனுவுக்கு உபதேசித்தேன். பிறகு மனுவின் வழியாக உலகில் இது பரவிற்று' என்று சொல்லிக் கண்ணன் தமது அவதார ரகசியத்தைக் கூறுகிறார்.

பிறகு, கர்ம யோகத்தின் பிரிவுகளையும் அவற்றுள் அடங்கிய ஆத்ம ஞானத்தின் பெருமையையும் விளக்குகிறார். கர்ம யோகம், ஞானயோகத்தை உள்ளடக்கிக்கொண்டிருப்பதால் அதுவே ஞான யோகத்தின் பலனையும் அளிக்கும் என்று கூறுகிறார்.

—மகாகவி பாரதியார்

**ஸ்ரீ பகவான் உரைப்பான்**

1. என்றும் அழிவே இல்லாத
இந்நல் யோகம் தன்னை நான்
அன்று விவஸ்வான் அவனுக்கே
அறிய உரைத்தேன் நன்றாக

2. விவஸ்வான் அதனை மனுவுக்கு
விரும்பி உரைத்தான், மனு அவனோ
புவனம் ஆண்ட இட்சவாகுப்
புரந்தரன் செவியில் போதித்தான்

3. இந்த வகையில் பரம்பரையாய்
இங்கே கிடைத்த யோகமதை
முந்தை ராஜ ரிஷிகளெலாம்
முற்றும் தெளிந்தே உணர்ந்திருந்தார்

4. காலம் கடந்த காரணத்தால்
காசினி மேலே, பரந்தபனே !
கோலம் இன்றி யோகமதை
இழக்கும் நிலைமை கூடிற்று

5. என்றன் பக்தன் தோழனென
இருக்கின் றாய்நீ என்பதனால்
இன்றைக் கதனை உனக்குரைத்தேன்
இதுவோர் உயர்ந்த ரகசியமாம் !

**அர்ச்சுனன் உரைப்பான்**

6. உனக்கு முன்னம் விவஸ்வான் இவ்
வுலகில் பிறந்தான் ! ஆதலினால்
எனக்கோர் ஐயம்! முதலில்நீ
இயம்பினை என்பதும் எப்படியோ?

7. என்றே அர்ச்சுனன் கேட்டவுடன்
என்றும் இருக்கும் ஸ்ரீபகவான்
நன்றே புகன்ற விடையதனை
நாமும் சற்றே பார்ப்போமே !

**ஸ்ரீ பகவான் உரைப்பான்**

8. எனக்குப் பற்பல ஜன்மங்கள்
இங்கே கழிந்துள; அதுபோல
உனக்கும் பற்பல ஜன்மங்கள்
உலகில் கழிந்தே போயுளவாம்

9. ஆனால் யானென் பிறவிகளை
அறிவேன்! நீயோ அறிவதில்லை!
நானோ ஏதும் பிறப்பற்றேன்!
நாளும் இருப்பேன்! அழிவற்றேன்!

10. இருக்கும் உயிர்கள் அனைத்துக்கும்
ஈசன் நான்தான்! என்றாலும்
பிரகிருதியினில் நிலைபெற்றுப்
பிறப்பேன் ஆன்ம மாயையினால்!

11. எந்தப் போதில் அறமிங்கே
இற்று விழுந்து போகிறதோ
அந்தப் போதில் நானிந்த
அகிலம் தன்னில் பிறக்கின்றேன்

12. நல்ல மனிதரைக் காத்திடவும்
நவைபுரி வோரைத் தீர்த்திடவும்
சொல்லும் அறத்தை நிறுத்திடவும்
தோன்றிடு வேன்நான் யுகம்தோறும்!

13. தெய்வத் தன்மை கொண்டிருக்கும்
சீரிய பிறப்பும் செய்கையதும்
மெய்யாய்உணர்ந்தோன்மெய்துறந்தால்
மீண்டும் பிறவா தெனையடைவான்

14. விருப்பம் அச்சம் சினம்யாவும்
விட்டுஎன் பால்அடைக் கலம்புகுந்து
கருத்தில் இருத்தித் தவம்செய்து
கதியுற் றார்கள் பலராவர்.

15. எவரெவர் என்னை எவ்விதத்தில்
இறைஞ்சி வேண்டு கின்றனரோ
அவரவ ரிடம்தான் அங்ஙனமே
அடைவேன்! எவ்வழி புவிதொடரும்!

16. செய்தொழில் வெற்றி பெற்றிடவே
தேவ தைகளைப் பூசிப்பர்!
செய்யும் தொழிலால் இப்புவியில்
சீக்கிரம் வெற்றி விளையாதோ?

17. தன்மை அதற்கும் செய்கைக்கும்
தக்க படிநான் வர்ணங்கள்
நன்கு சமைத்தேன் நான்காக!
நானே அவற்றைச் செய்கின்றேன்!

18. என்னைக் கர்மம் ஒட்டாது!
எனக்கதன் பயனில் விழைவில்லை!
என்னை அறிவோன் கர்மத்தால்
என்றும் கட்டப் படமாட்டான்!

19. முத்தி விழைந்தோர் முன்னாளில்
முழுதிதை உணர்ந்து தொழில் செய்தார்
அத்தகு வண்ணம் முன்னோர் போல்
ஐயா! நீயும் தொழில் செய்வாய்!

20. எது தொழில்! எது தொழில் இல்லை
யென
ஞானிகள் எல்லாம் மயங்கிடுவர்!
அதுகுறித் துனக்கே உணர்த்துகிறேன்.
அறிக! தீமை விட்டொழியும்!

21. தொழிலின் இயல்பும் தொழிலதனைத்
தொற்றும் தீமை இயல்பதுவும்
தொழிலில் லாத போதியல்பும்
தெரிக! தர்ம நடை சூழ

22. செய்கை தனிற்செய லின்மையும்
செயலின் மையிலே செய்கையையும்
மெய்யாய்க் காணும் ஒருமனிதன்
மிகுந்த வலிமை உடையவனாம்!

23. இந்தப் புவியில் அம்மனிதன்
எந்தத் தொழிலைச் செய்தாலும்
அந்தச் சமயம் மிகவுயர்ந்த
யோகம் தனிலே அவனிருப்பான்

24. எவனுடைச் செய்கைத் தொடக்க
மெலாம்
ஏதும் விருப்பம் அற்றனவோ
அவன்செயல் ஞானத் தீயினிலே
எரிந்தது; நல்லறி வவனுடையான்!

25. காலம் முழுதும் திருப்தியுடன்
தர்மப் பயனில் பற்றற்றும்
நீள உலகில் சார்பற்றும்
நிற்பவன் செயலில் செயலற்றான்

26. ஆசை இன்றிச் சித்தத்தை
ஆன்மா அதனால் கட்டி வைத்து
காசும் பிறவும் வாங்காமல்
காரியம் செய்வோன் பாவமிலான்!

27. தானாய்க் கிடைக்கும் லாபத்தில்
சந்தோ ஷித்திரு மைகடந்து
வீணாய் மனத்தில் பொறாமையற்று
வெற்றி தோல்வி இரண்டினையும்

28. ஒன்றாய்க் கருதும் ஒருமனிதன்
உலகில் எத்தொழில் செய்தாலும்
ஒன்றும் அந்தத் தொழிலாலே
ஏதும் கட்டுப் படுவதில்லை!

29. பற்றுதல் இன்றி அறிவில்மதி
பதித்துத் தொழிலை வேள்வியென
முற்றும் கருதும் மானுடனின்
முன்வினை தானே நழுவிவிடும்!

30. பிரம்மத் துக்கே அர்ப்பணமாய்ப்
பிரம்ம அவியை அத்தீயில்
பிரம்மத் தாலே ஓமஞ்செய்வான்
பிரம்மம் தன்னை அடைந்திடுவான்

31. தேவர்க் காற்றும் வேள்வியினைச்
சிலசில யோகிகள் வழிபடுவர்
தேவர் பிரம்மத் தீயினிலே
வேள்வியை ஆகுதி சிலர் செய்வர்

32. உட்கர ணந்தனை அடக்குகிற
உயர்ந்த சம்யமம் எனும் தீயில்
நற்செவி முதலிய இந்திரியம்
நாடி ஆகுதி செய்திடுவர்

33. சிற்சிலர் இந்திரியங்களெனத்
திகழ்ந்திடு தழல்களில் ஒளியதுவும்
மற்றும் பற்பல விஷயமதும்
மகிழ்வுடன் விரும்பிச் சொரிந்திடுவர்

34. வேறு சில பேர் ஞானத்தால்
வெந்தெரிந்ததன் ஆட்சியெனும்
சீருறு யோகத் தீயில்புலன்
செயல்களை ஓமம் பண்ணிடுவார்

35. விரதம் அதனைக் காப்பாற்றும்
முனிவரில் வேறு சில பேர்கள்
திரவியத் தாலே வேட்டிடுவர்
சிலபேர் தவத்தால் வேட்டிடுவர்

36. சிலபேர் யோகம் அதனாலும்
சிலர்நற் கல்வி அதனாலும்
சிலபேர் ஞானம் தன்னாலும்
சீரிய வேள்வி புரிந்திடுவர்

37. சிலபேர் மூச்சை அடக்கிடுவர்
செப்பும் பிராணன் அபானவெனும்
நலம்வேர் வாயுக் களின்நடையை
நன்றாய்க் கட்டி வேட்டிடுவர்

38. உணவைச் சிலபேர் ஒழுங்காக்கி
உயிரை உயிரில் ஆகுதியிட்(டு)
அனைவரும் வேள்வி நெறியுணர்ந்தே
ஆற்றும் வேள்வியால் பாவமற்றார்

39. வேள்வியில் எஞ்சும் அமுததனை
விரும்பி உண்போர் அழியாமல்
நாளும் இருக்கும் பிரம்மத்தை
நன்றா யடைவார் ஐயமில்லை!

40. குருகுலத் தாரில் சிறந்தவனே!
குவலய மிதுவோ வேள்வியினைப்
புரியா தார்க்குக் கிடையாது!
போற்றும் பலஉல கதுவுமில்லை!

41. பிரம்ம மதனின் திருமுகத்தில்
பேசும் பலவித வேள்வியெலாம்
விரிவுடன் தெரிவன! அவை தொழிலில்
பிறப்பன! உணர்க! வீடுறுவாய்

42. திரவியம் அதனால், பார்த்திபனே,
செய்யும் வேள்வி அதைவிடவும்
சிறப்புறும் ஞான வேள்வி! அந்தத்
தீயினில் தர்மம் முடிந்துவிடும்

43. அந்த ஞானத் தீயதனை
அறிக, வணங்கித் தொண்டாற்றி!
சிந்தை தெளிந்த ஞானியர்கள்
செய்வார் ஞான உபதேசம்

44. அந்த ஞானம் பெறுவதனால்,
அர்ச்சுனா, இனிநீ மயக்கமுறாய்!
இந்த உலக உயிரெல்லாம்
எழிலுறக் காண்பாய் உன்னுள்ளே!

45. அப்புறம் அவற்றை என்னுள்ளே
அழகுறப் பார்ப்பாய்! ஞானமெனும்
தெப்பம் அதனால் கொடியவினை
சீக்கிரம் கடந்து சென்றிடுவாய்!

46. எரியும் தீயோ விறகுகளை
எளிதில் சாம்பராக்கிவிடும்
பரந்தபா! ஞானத் தீயதுவோ
பட்டென வினைகளை எரித்துவிடும்

47. தூய்மை தரும்பொருள் ஞானம்போல்
தொல்லுல கிதனில் வேறில்லை
தீமை அற்ற யோகத்தில்
சித்தி உற்றவன் அதுபெறுவான்

48. பிரம்மம் அதனைப் பரமாக்கிப்
பெரிதும் புலனை அடக்குகிற
சிரத்தை உடையான் ஞானத்தை
எய்திச் சாந்தியில் திகழுகிறான்

49. அறிவு, சிரத்தை, இல்லாமல்
ஐயம் கொண்டவன் அழிகின்றான்
விரியும் உலகம் ஐயமுடன்
விளங்கிடு வார்க்குக் கிடையாது.

50. செய்கை அதனை யோகத்தால்
தெளிந்து துறந்து ஞானத்தால்
ஐயம் அறுத்துத் தன்னைத்தான்
ஆள்வோன், கர்மம் அகல்கின்றான்

51. அஞ்ஞா னத்தால் நிலைபெற்ற
ஐயம் அதனை உயர்வுடைய
மெய்ஞ்ஞா னத்தின் வாள்கொண்டே
அறுத்து மேன்மை நிலை கொள்வாய்.

# பகவத்கீதை காட்டும் "மூடர்கள்"

(பாரத்வாஜ வைகாநஸ கோபாலகிருஷ்ண பட்டாச்சாரியார்)

நிறைஞானத்து ஒரு மூர்த்தியாய் விளங்குகின்ற பகவான் ஸ்ரீ கிருஷ்ணனுல் அருளிச் செய்யப்பட்ட கீதா சாஸ்திரத்தில் கர்ம, ஞான, பக்தி யோகங்களைப்பற்றிய விளக்கங்கள் மிக விரிவாய் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த சாஸ்திரத்திற்கு த்வைத, அத்வைத, விசிஷ்டாத்வைத பரமான பாஷ்யங்களும் தோன்றியுள்ளன. இவற்றையெல்லாம் அறிவதற்கு ஆசார்யனின் சார்வும் எம்பெருமானின் அருளும் இருந்தால்தான் சாத்தியமாகும்.

அறிவொன்றுமில்லாதவர்களும் அவனைப் பெற்று அனுபவிக்க அவனே உபாயமாகிருன். அவனைத் தவிர மற்றவற்றில் அபிமானம் வைப்பது மூடர்களின் செயலாகும். இதை கீதையில் கண்ணன் சொல்லியிருக்கிறபடி ஆராய்வோம்.

அர்ச்சுனன் யுத்தத்திற்கு ஆயத்தமாகி சாரதியாகக் கண்ணனைக் கொண்டு தேரில் போர்க்களத்தை அடைந்த பின், எதிரிலே நிற்கும் பாட்டன், குரு, பந்துக்கள் இவர்களைப் பார்த்தவுடன், நெஞ்சின் வலிமை இழந்து யுத்தம் செய்வதா அல்லது பிச்சை யெடுத்துண்பதா என்று மனம் கலங்குகிருன்.

இவ்வாறு ஒரு தர்மயுத்தத்தை நடத்த வேண்டுமென்று முதலில் நிச்சயித்து விட்டு, பின்னர் செயலில் இறங்க வேண்டிய தருணத்தில் மனம் குழம்பி, பின்வாங்க நினைப்பவன் மூடன் என்பது 'தர்மசம் மூட சேதா:' என்பதால் சொல்லப்பட்டது.

ஆத்மா அழிவற்றது என்கிற அறிவு பகவானிடம் பக்தி இல்லாதவனுக்கு ஏற்படாது. பகவத் பக்தி இல்லாதவன். ஆத்மாவையும் அந்தராத்மாவையும் பாவித்து உணரும் சக்தி இல்லாதவன். அப்படிப்பட்ட ஞானம் இல்லாதவனுக்கு சாந்தி ஏற்படாது. மனதில் அமைதி இல்லாதவனுக்கு சுகமும் இல்லை. ஆத்மா அழிவற்றது என்கிற அறிவு இல்லாதவன் மூடன்.

எவன் புலன்களையெல்லாம் அடக்கி எத்தொழிலும் செய்யாமல் இருந்தாலும், மநநால் புலன்களுக்கு விஷயமாகும் சப்தம் முதலியவற்றை நினைத்துக் கொண்டிருக்கிருனே அவன் பொய் ஒழுக்க முடைய மூடன் என்று சொல்லப்பட்டுள்ளது. புலன்களை அடக்குவதுஎன்பதுகாரியங்களைச் செய்யாமல் இருப்பது மட்டுமல்ல, மனதாலும் அவற்றை நினைக்காமலிருக்கவேண்டும்.

சத்வ, ரஜஸ், தமோ குணங்களின் அடியாக தான் செய்கிற செயல்களையெல்லாம் தானே செய்பவனுக நினைத்து செருக்கு அடைபவன் ஒரு மூடன். குணங்களின் வகைகளையும் கர்மப் பிரிவுகளையும் அறிந்தவன் கர்த்தா அஹம் என்று கர்வப்படுவதில்லை.

முக்குணங்களின் வலிமையால் ஆத்மாவை அறியாமல் மயங்குபவர்கள் அந்தந்த குணங்களுக்கு ஏற்ப செயல்களில் ஈடுபட்டு அவற்றை செய்பவர்கள் தாங்களே என்றும். அந்த செயல்களுக்கான பலனும் தங்களுடையதே என்றும் மயங்குவர். இவர்கள் மூடர்கள்.

செயல் படும் போது பலனில் விருப்பமில்லாமலும், செய்யவேண்டியது பகவத் கைங்கர்யமாகவே என்றும் செய்யும் காரியங்களுக்குப் பகவானே பலன் கொடுக்கவல்லவன் என்பதையும் எவர் உணரவில்லையோ, எவர் கர்ம யோகம் என்கிற சித்தந்தத்தை ஏற்காமலும் பொருமை கொண்டவர்களாய் சிரத்தை இல்லாமலும் இருக்கிருர்களோ, அவர்கள் மூடர்கள். அவர்கள் பெருந்தீமை அடைவார்கள்.

தான் பகவானின் அடிமை என்கிற அறிவு அற்றவனாய் தேகம் வேறு ஆத்மா வேறு என்று அறியாமல் தேகத்தின் இன்பத்துக்காக பாடுபட்டு, அடைந்து, பிறகு அதனாலேயே ஏற்படும் துன்பத்தால் அவதியுறுபவன் மூடன்.

பகவானை அடைவதற்கான யோகத்தைத் தொடங்கிவிட்டு அதைத் தொடர்வதற்கு முயற்சியற்றவனாய் சோகம் நிறைவு பெறாமல் மனம் நழுவப்பெறுபவன் கூட மூடன்தான். என்றாலும் இவன் அனுஷ்டித்த யோகம் அடியோடு நஷ்டமாவதில்லை. வேறு பிறப்பில் இவனால் தொடரப் பெற்று சித்தியடைகிறான்.

கொடிய செயல்களைச் செய்பவர்களும் மனிதர்களுள் கடையர்களும், மாயையினால் கவரப்பட்ட அறிவையுடையவர்களாய், ஸ்ரீமந்நாராயணனாகிய, வாசுதேவனை நமஸ்கரிக்கமாட்டார்கள். இவர்கள் மூடர்கள்.

அஜாயமான: பஹுதா விஜாயதே என்கிற வேதவாக்கியத்தின்படி, பிறப்பு இல்லாதவனாகிய வாசுதேவன் தன் இச்சையாலே சாதுக்களை காப்பதற்கும் துஷ்டர்களை ஒழிப்பதற்கும் யுகம் தோறும் அவதரிக்கும் போது, அவனுடைய அவதார மகிமையை உணராமல் மனிதவடிவில் இருப்பதால் அவனும் கர்மவசமாய் பிறந்த ஒரு மனிதனே என்று நினைக்கின்றவர்கள் மூடர்கள். அப்படிப்பட்ட மூடர்கள் அவதாரப் பெருமையை உணராமல் மனிதனாக எண்ணி அவனிடம் வெறுப்பும் உதாஸீனமும் கொள்கின்றனர். இப்படிப்பட்ட மூடர்கள் பகவான் எதிரில் வந்து நின்றாலும் தன்னுடைய விசுவரூபத்தைக் காட்டினாலும் பயத்தையும் மன மயக்கத்தையுமே அடைவார்களே ஒழிய இவன் பரம்பொருள் என்று உணர்ந்து வணங்க மாட்டார்கள்.

சத்வ குணம் மிகுந்து இருப்பவன் சாந்தமாக மரணமடைகிறான். பதைபதைப்போடும், பேராசையுடன் ரஜோ குணத்தையுடையவன் மரணமடைகிறான். கர்மயோகத்தைத் தொடரும் ஜன்மா அவனுக்கு ஏற்படுகிறது. தாமஸ குணத்துடன் உயிர் விடுபவன் மூடயோனிகளில் சேர்ந்து மூடனாகப் பிறக்கின்றான். மூடயோனிகளில் பிறப்பதைத் தவிர்க்க வேண்டுமென்றால் தாமஸ குணங்களை விட வேண்டும். அதற்கும் பகவானையேப் பிரார்த்திக்க வேண்டும்.

ஆணவமில்லாமலும், பற்று இல்லாமலும், பகவான் ஸ்வாமி என்றும் நாம் அடிமை என்னும் ஞானம் உடையவனாய், இன்ப துன்பங்களால் மனமாறுபாடு அடையாமல் இருப்பதே பரம பதத்தைக் கிட்டுவிக்கும். இதற்கு எதிராக இருப்பது மூடத் தன்மையாகும். ஸ்ரீமந்நாராயணனே புருஷோத்தமன் என்பதை அறிந்து முழுமனதுடன் அவனையே விரும்பி சரணமடைகிறவன் மதிமயக்கமற்றவன். அவ்வாறு செய்யாதவன் மூடன்.

அஹங்காரம், பலம், இறுமாப்பு ஆசை கோபம் இவைகளையுடையவனாய், எல்லா சரீரத்திலும் உடல்மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்து நிற்கும் திருமாலை வெறுத்தும் அவமதித்தும், துவேஷித்தும் வாழும் துஷ்டர்களை, அசுரயோனிகளில் தள்ளி ஒவ்வொரு பிறப்பிலும் மூடர்களாய் உழலும் படியாக எம்பெருமான் செய்கிறான். மூடர்களாய் இருப்பவர்கள் தங்களைத் துன்புறுத்திக் கொண்டும் பிறரைத் துன்புறுத்துவதற்காகவும் தவம் செய்வார்கள். இவ்வாறு மூடர்கள் எவர் என்று கீதையில் சொல்லியிருப்பதை மீண்டும் மீண்டும் நினைத்துப் பார்த்து இப்படிப்பட்ட மூடத்தனத்தைக் களைந்துபரிபூரணனாகிய ஸ்ரீமந்நாராயணனைச் சரணமடைந்து, அவனாலே பாபங்களை எல்லாம் கழிக்கப் பெற்றவர்களாய் அவன் அருளாலே சாசுவதமான சுகத்தை அடைவோமாக!



## மனிதப்பிறவி

உலகில் பல உயிர் (பிறவி)கள் துன்பங்களையும், நிலையாத இன்பத்துக்கு உடலில் அலையும் அவலத்தையும் உணர்ந்து மறு பிறவி வேண்டாத வழி செல்லவே, பகுத்தறியுள்ள மனிதப் பிறவியை இந்த உயிருக்கு இறைவன் அளித்துள்ளான்.



# புரட்சி வைணவம் — 18

இரா. சுராஜ்

சமய உலகில் பெரும் புரட்சியை விளை வித்தது வைணவம் என்பதைத் தொடர்ந்து பார்த்து வருகிறோம். கார்த்திகை மாதத்தில் அவதரித்த இருபெரும் ஆழ்வார்களும் புரட்சி வரலாறு படைத்தவர்கள். கார்த்திகையில் கார்த்திகை நாள் வந்துதித்த கலியன் கள்ளர் வகுப்பில் தோன்றிய மறவர் குலத்தவர். ஆழ்வார் கோஷ்டியுடன் ஆசாரியக்குழுவி லும் பரகாலன் என்று இடம் பெறும் இவ் வாழ்வார் எம்பெருமான் அருள் பெற்ற வரலாறே புரட்சி நிறைந்தது !

தனி இடத்தில் ஆசிரியர் உயர்ந்த ஆதனத் திருக்க, கைகட்டி வாய் பொத்திப் பெற வேண்டிய மந்திர உபதேசத்தை, வழிப்பறி செய்கையில் வாள் காட்டி 'என்ன மாயமந் திரம் செய்தாய்' என்று மணமகனாக வந்த இறைவனையே மடக்கி, வாள்வலியால் மந்தி ரம் கொண்டவர் கலியன்.

உண்டியே உடையே உகந்து ஓடும் உலோ பிகளான செல்வர்களின் செல்வத்தை, இறை வன் தொண்டுக்கெனவழிப் பறி செய்தவர் அவர். தான் இறைவனிடம் கேட்டமந்தி ரத்தை 'நான் கண்டு கொண்டேன் நாரா யணா என்னும் நாமம் ; நானும் சொன்னேன் நமரும் உரைமின் என்று உலகறிய வெளி யிட்டு, இமயம் முதல் குமரிவரை பாத யாத் திரை புரிந்து, பர, வியூக, விபவ, அந்தர் யாமி நிலைகளை விட அர்ச்சையே உயர்ந்தது என்று நிலைநாட்டிய புரட்சிக்காரர் திரு மங்கை மன்னன். திருக்கண்ண மங்கை இறை வனை ''நின்றனக்கும் குறிப்பாகில் கற்கலாம் கவியின் பொருள்தானே' என்று தம்மிடம் பொருள் கேட்க மாணவராய் வர அழைத்த பெருமிதமுடைய ஆழ்வார் இவராவார்.

திருப்பாணாழ்வார், நான்கு குலத்திற் கும் கடையான ஐந்தாவது குலத்தில் தீண் டப்படாதவர் எனக்கருதப்பட்ட குலத்தில் வாழ்ந்தவர். திருவரங்கத் திருப்பதியையும் மிதிக்காமல் காவிரிக் கரையில் நின்று பாடிய அவரை, குலம் கருதி வைதிக அந்தணச் சமு தாயம் ஒதுக்கியது. அரங்கனோ, பரமவைதி கரான லோகசாரங்கருக்கு நல்லறிவு புகட்டி, அவரது தோளில் பாணரை ஏற்றி வரச் செய்து தமது கருவறையில் புகச் செய்தான் இது போன்றதொரு புரட்சி வரலாற்றை வேறெங்கும் காணமுடியாது. அவர் அக்னி பிரவேசம் செய்யவில்லை ; பிராமண வடிவம் பெற்றால்தான் உய்வு என்பதும் வைணவத் துக்கு உடன்பாடான கருத்தல்ல. இருந்த இருப்பில் அந்தஞானியை விக்ரகத்தோடு ஏற்றான் நம்பெருமாள்.

பூத உடலுடன் அரங்கனுடன் கலந்த பெருமை ஆழ்வார்களில் இவருக்கே உண்டு. ஆண்டாள் இப்பேறு பெற்ற மற்றொருவர். பரம வைதிகரான சுவாமி தேசிகர், அமலனா திபிரான் என்ற இவரது பிரபந்தத்துக்கு மட் டுமே முனிவாகன போகம் என்ற விளக்கம் எழுதி இருப்பதும்,

''பாண் பெருமாள் பாடல் பத்தும்
பழமறையின் முடிவென்று பரவினோமே'

என்று முழக்கியதும், அரங்கனைச் சேவிக்கும் யாரும் அவரது திருவடி வாரத்தில் திருப்பா ணாழ்வாரை மனத்தால் நினைத்துத் தொழ வேண்டும் என்ற ஆசாரியர் ஆக்ஞையும் சாதி கடந்தது வைணவப் புரட்சிச் சமயம் என் பதை நிலை நிறுத்தும் செய்திகளாகும்.

# பாரத மணிகள் சாந்தி பர்வம்

## குமாரவாடியார்

ராஜதர்மம் பத்தொன்பதாம் அத்தியாயம்

### தர்மபுத்திரரின் ஆன்ம உணர்வு மிக்க அறிவுரை

தம்பி அர்ஜுனன் உரைக்கு பதிலளித்து தர்மபுத்திரர் பேசுகிறார்:- அர்ஜுனா! கர்ம சாஸ்திரங்களையும் (மானிட முயற்சிகள்) பிரம்ம சாஸ்திரங்களையும் (இறைவன் அருளிச்செயல்கள்) நான் அறிகிறேன்.

வேத வசனம் இரு குரலில் ஒலிக்கிறது. கர்மத்தைச் செய் என்கிறது ஒரு குரல்; மற்றொன்று கர்மத்தை விடு என்கிறது. எத்தனை யுக்தி சொன்னாலும் முரண்பாடு நீங்குவதில்லை; இந்த முரண்பாட்டின் கருத்தை நானறிவேன்.

நீயோ சாஸ்திரம் மட்டுமே படித்தவன்; கொண்ட கொள்கையில் பிடிவாதமுள்ளவன். சாஸ்திரத்தின் நோக்கு அல்லது திரண்ட கருத்தை நீ அறிய வல்லவன் அல்லன். ஆன்ம நெறியை உணர்ந்திருப்பின் நீ இப்படிப் பேச மாட்டாய்.

சாஸ்திர தாத்பர்யம் (திரண்ட கருத்தை) அறிந்தவன் அறவழியில் தெளிவு பெற்றவன் எவனும் இவ்வாறு பேசான்.

ஓ! அர்ஜுனா நீ என் உடன் பிறந்தான்; என் நலனில் நாட்டம் கொண்டு அன்புடன் நீ பேசுவதைக் கேட்டு மகிழ்ச்சியுறுகிறேன்.

தேவர்களில் முதல் மூவருக்குச் சமமாக எவருமிலர்; போர் வீரரில் உனக்கு ஒப்பானவர் யாரும் இலர். இந்திரன், வாயு, ஜனார்த்தனன் இவர்களிடம் வலிமை குடி கொண்டுளது. அதே வலிமை உன்னிடமும் பீமனிடமும் உண்டு.

ஏ பாண்டவனே! வியத்தகு போர் வீரன் நீ! வெகு தொலைவில் உள்ள எதிரியையும் ஒழிக்க வல்லவன் நீ! உனக்கு நிகர் நீயே. போர் முறைகள் உனக்குக் கைவந்த கலை. அத்துறையில் உனக்கு ஈடு எடுப்பு எவருமிலர்.

அறமும் அறம் சார்ந்த மற்ற நல்நெறிகளும் சிறிதும் ஐயமின்றி எனக்குத் தெரியும். உண்மையான தர்ம நுட்பத்தை அறிவிப்பதில் நீ என்னை ஏய்த்து விட முடியாது. போர் முறையில் நீ வல்லவனாயிருக்கலாம் அற நுட்பங்களில் நீ என்னிலும் தேர்ந்தவனல்லன்.

அறத்தின் சுருக்கையும் பெருக்கையும் உணர்ந்த பெரியோரை நீ அண்டியிருந்தவனல்லன்; அப்பெரியோர் அருள் பெற்றவன் நான்.

தவம் (புலனடக்கம்) தியாகம் (துறவு) அவதி (தன் உவப்பு அல்லது அருள்) இம்மூன்றும் அறிஞர்களால் தெளிவுறுத்தப் பட்டுள்ளன.

—இவற்றுள் ஒன்றைக் காட்டிலும் மற்றொன்று சிறந்தது. செல்வம் அதாவது பொருளுக்குமேல் வேறுஇல்லை என்பது உன் கருத்து. இந்தச் செல்வம் சிறந்தது அல்ல என்பது என் கருத்து.

உலகில் தவம், வேதப்பயிற்சி இயல்பாக உள்ளோர் பலர் இருக்கிறார்கள், அவர்களுக்கு அழிவற்ற (சநாதன) வாழ்வு கிட்டுகிறது.

அருணர் என்றும் கேதுக்கள் என்றும் சில முனிவர் மீசை முளைக்காத பருவத்தில் அச்சமின்றி காடு சென்று வேதம் பயின்று நற்கதியுற்றனர். தவம் இத்தகையது.

பற்றுக்களை விட்டு, அறியாமை இருள கற்றி, உயர்ந்தோர் சிலர் 'தேவயானம்' என்னும் நெறியில் துறவிகளுக்குரிய நிலை யான இன்ப உலகை அடைந்தனர். நீத்தார் தன்மை இது.

பித்ரு (முன்னோர்) வழி தென்திசை செல்வோர் சந்திரமண்டலமடைந்து, மீண்டு வினைச்சுழல் வழியில் கர்மத்திலீடுபடுவர். அவர்கள் மயானம் செல்வர்.

உள்ளம், உரை கடந்த பரமபதம் எய்த வழி தேடுவதே அவிதி — (இறையருள்) என்னும் மூன்றாவது நெறி.

இவ்வாறு மேன்மைநிலம் எய்த, இவ் வுலகில் துறவு முக்கியமானது என்பது என் கருத்து.

உன்னைப் போன்றோர் இதனைப் புரிந்து கொள்வது எளிதன்று.

பயன் மிக்கதும் பயனற்றதுமானவற்றை அறிய விரும்பும் கவிகள் ''இங்கு இருக்குமோ? அங்கு இருக்குமோ?'' என்று பல நூல்களையும் ஓர்ந்து இத்தகைய முடிவுக்கு வந்துள்ளனர்.

இதன் உண்மையறியாத சாமானியர் வேத சாஸ்திரங்களையும், உபநிஷதங்களையும் ஒதுக்கிவிட்டு வாழை மரத்தை பிளந்து ஸார மான ஒன்றும் காணாதது போல, ஏமாறிக் கிடந்து அலற்றுகிறார்கள்!

அத்தகைய மக்கள் தனித்திருப்பதொரு துறவு வழியைவிட்டு விலகி, ஐந்து பூதங் களாலான இந்த உடலில், உள்ள ஆன்மாவை உள்ளபடி அறியாமல், ஆசை, பகை உடையதாக ஆத்மாவைப் பற்றிப் பேசு கிறார்கள். அது உண்மைக்கு மாறானது.

கண் முதலான புலன்களுக்கு எட்டாத தும், உரைகளால் விளக்க வொண்ணாதது மான ஆத்மா செயல்படுதற்காக அறியாமை யுடன் உடல்களில் சுற்றி வருகிறது.

பகுத்தறிவுள்ள மனிதன் ஆன்மாவைப் பற்றி நிற்கும் ஆசையை அடக்கி (இறைவ னிடம் செலுத்தி) வினைச் சுழலை வேர் அறுத்தல் வேண்டும். தான் தனது எனும் எண்ணங்கள் அற்று, தன்னை வீடுபேற்றுக்கு உரியவனாக்கிக்கொண்டு சுகப்பட வேண்டும்.

அர்ஜுனா! மெய் உணர்ந்த சான்றோர் காட்டும் இவ்வழி இருக்கையில், துன்பநெறி படர்ந்த மற்ற வழிகளை நீ எங்ஙனம் நாடு கிறாய்? கொண்டாடுகிறாய்?

ஓ, பாரத!

கர்ம சாஸ்திரம் கற்றவரும், எப்போதும் தானம், தருமம் யாகம் முதலிய நற்கருமம் புரிந்து, புண்ணியம் தேடுவோரும்கூட, மோக்ஷ வழி உயர்ந்தது என்பதை உணர்ந்தேயுள்ளனர்.

அதே நேரத்தில் யுக்தியும், கல்வியறிவும் மிக்க சிலர் மோட்சம் என்பது ஒன்று இல்லை என்று மூடத்தனமாய் கூறுவதையும் காண லாம்.

அத்தகைய படித்த முட்டாள்களை திருத்துவது மிகக் கடினம். படித்தபடிப்பு, வாய்த்த திறமைகளைக் கொண்டு சான்றோ ரைப் பழிக்கும் பலர் மண்ணுலகில் உள்ளனர்.

ஏ பார்த்தா! நாமே முயன்று நன்கு அறியாதவற்றை மற்றவர் மட்டும் எப்படி தன் முயற்சியால் தெரிந்து கொண்டுவிட முடியும்? சாஸ்திரங்களும் கல்வியிற் பெரிய சான்றோர்களுமே தாமே அறியாதவற்றை தவத்தாலும், துறவாலும், அருளாலுமே அறிய முடியும், அடைய முடியும். இதுவே ஞானம். இறைவனை அடையும் வழியாக நெறியே. அதுவே சுகம்'' என்று முடித்தார்.

அப்போது தேவஸ்தானர் குறுக்கிட்டு, சில உரைத்தார். அதனை அடுத்த இதழில் காணலாம்.

# திருமால் அடியார் பாத யாத்திரை-13.

குமாரவாடி சே. இராமாநுஜாசாரியர்

## மலைவையாவூர்

சென்ற சில ஆண்டுகளாக 'திருமலை வையாவூர்' என்றும், தெற்குத் திருப்பதி என்றும் விளம்பரம் செய்யப் பெற்று வரும் மலைவையாவூர், குமாரவாடி மற்றும் சுற்றுக் கிராம ஸ்ரீவைஷ்ணவக் குடும்பங்கள் பல வற்றுக்குக் குலதெய்வம் குடி கொண்ட இட மாகும்.

புக்கத்துரை அருகே குமாரவாடி, பட்டாளம் பக்கத்து பழயனூர், கருங்குழி அருகே அருணபுரம் என்னும் அரையப் பாக்கம், பூதூர் போன்ற கிராமங்களில் இந்த நூற்றுண்டின் முற்பகுதிவரை ஏராள மான ஸ்ரீவைஷ்ணவ அந்தணக்குடும்பத்தினர் வசித்துவந்தனர். அவர்கள் அனைவரும் மலை வையாவூரை தங்கள் ஆத்ம க்ஷேமத்துக்கு அண்டியிருந்தனர்.

ஒரு சிறிய மலை மீது ஸ்ரீனிவாஸப் பெருமாள் வேங்கடவன் குடிகொண்டிருக் கிருர். முஸ்லிம்கள் கலக காலத்தில் இங்கு வந்தேறியான, அழகிய திருமேனி வாய்ந்த கள்ளர்பிரான், மற்றும் வராஹப் பெருமாள் வேணு கோபாலன் சிறிய திருவடி (வீர ஆஞ்சநேயர்) சக்கரத்தாழ்வார், நரசிம்மர், இவர்களோடு தாயார் ஆண்டாள் ஆகி யோரும் தனிக்கோயில் கொண்டுள்ளனர். மலை சிறிதாயினும் கோயில் கணிசமான அளவில் மூடுகோயிலாகும். ஆழ்வார், ஆசார் யர்களோடு மணவாள மாமுனிகளும் எழுந் தருளியுள்ளார். சுற்றியுள்ள கிராமத்தினர் அனைவரும் தென்கலை மரபினர்.

கோல்கொண்டா ராயர் மரபினர் பலர் அப்பகுதிகளில் குடியேறி, நில புலன்கள் பெற்று, வளமாக வாழ்ந்து வந்தனர்; தெலுங்குபேசும் பந்துலு பலர் இருந்தனர். புக்கத்துரை போன்ற கிராமங்களில் ரெட்டி யார் வகுப்பினர் செல்வச் சீமான்களாய் விளங்கினர். அவர்கள் அனைவர் ஆதரவிலும் சில நூற்றுண்டு, வரலாறு படைத்த சீரும் சிறப்பும் வாய்ந்த கோயில் இது. திருமால் அடியார் அபிமானித்த தலம். அருகே வைணவ வரலாற்றுச் சிறப்பு பெற்ற மதுராந்தகம் கோதண்டராமர். ஏரிகாத்தராமன் என வெள்ளையராலும் பராட்டப் பெற்றவர்.

திருமால் அடியானின் இளமைக் கால நினைவுகள் இம்மலையைச் சுற்றி எழுந்தன. குமாரவாடி தாமரைக் குளத்தில் நீச்சலடித் துக் குளிக்கும் போது வையாவூர் குன்றி லிருந்து, கொடிமரத்தின் மணியோசை'கலகல வென்ற ஒலி' காதில் விழும். மாலை வேளை யில் குன்றிலிட்ட விளக்கு தெய்வ நினை வெழுப்பும். திருமால் அடியானின் தந்தை வங்கீபுரம் பத்தங்கி சேஷாத்ரி அய்யங்கார், 'செஷய்யன்' என, அப்பகுதி கிராம மக்கள் அன்புக்கும் மதிப்புக்கும் உரிய சிறந்த விவ சாயியாக விளங்கினர். வேளாண்மையில் ஈடுபட்டவராயினும் கோயில் கைங்கர்யத்தில் ருசி மிக்கவர். உலகப் புகழ் பெற்ற காஞ்சி காதி அனந்தாசாரிய ஸ்வாமியின் அபிமானம் பெற்று, மும்முறை வடதேச யாத்திரை செய்து, வதரி வணங்கித் திரும்பியவர். கிராமவாசியாயினும் நாட்டு வளப்பம் நன் கறிந்தவர்; கிராமத்துக்கு வரும் விருந்தினர் யாராயினும் விரிந்த உள்ளத்துடன் உவந்து வர வேற்று உபசரிப்பதில் முன் நிற்பவர்.

திருமால் அடியானின் தந்தையார் மலைவையாவூர் பெருமாளுக்கு, அடிவாரத்தி லுள்ள புஷ்கரிணி (குளம்) யிலிருந்து தீர்த்தம் சுமந்து மலையேறி, மடைப்பள்ளி, மற்றும் பரிசாரக கைங்கர்யங்களை முடிந்த போதெல் லாம் செய்து வந்தவர். கைக்கூலி வாங்காமல்

உவந்து பணிசெய்யும் பான்மை திருமாலடியானுக்கு பிதுரார்ஜிதம் ஆயிற்று. இளமைக் காலத்தில் வயல் வரப்புக்களிலும், பொட்டல் காடுகளிலும் இரண்டு மைல் தொலைவு நடந்து வர வேண்டியிருந்தது. வழியில் களாக்காய் பறித்தும், நறுமணமிக்க காரமான துளசியைச் சுவைத்துக் கொண்டும், மலையேறுவது வழக்கம். மலைக்கு இரண்டு படி வழிகள் உண்டு.

மலைவையாவூர் வைகானஸ ஆகமப்படி அமைந்தது. அருளிச் செயலுக்காக சில ஆசார்ய புருஷர்கள் இருந்தனர். ராயர் வகையரு தருமகர்த்தம் பார்த்தனர். உற்சவங்கள் சிறப்பாக நடந்தன. சுற்றுக் கிராம வாசிகளுக்கு நல்ல பொழுதுபோக்கு.

இதெல்லாம் ஐம்பதாண்டு முந்திய செய்திகள். இப்போது வேடந்தாங்கல் பறவை சரணாலயத்துக்குச் செல்லும் சென்னைப் பேருந்துகள் செல்லும் வழியில் உள்ளதால் மலைவையாவூரை மக்கள் மறக்கவில்லை.

சென்ற சில ஆண்டுகளாக குறிசொல்லுதல், ஜோதிடம், மாந்திரிகம் போன்றவற்றுக்கு ''மவுஸ்'' ஏற்பட்டுள்ளது. ஆன்மிக உணர்வுத் தெளிவில்லாத சிலர் உபாசகர்கள் என்ற பேரால் மக்களின் சாமானிய விருப்பங்களைத் தூண்டி, ''அருள் வாக்கின்'' மூலம் மூட பக்தர்களை திரட்டுவதில் முனைந்துள்ளனர். சைவர் சிலர் சக்தி பேராலும், வைஷ்ணவர் சிலர் ''அனுமன்'' பேராலும் சென்னையிலும் சுற்றுப்புறத்திலும் விளம்பரம் செய்து ஏராளமான பொருள் திரட்டி வசதி தேடிக் கொண்டிருக்கின்றனர். ''அருள் வாக்கு'' அனுமார் கோவில்கள் அண்மைக் காலத்தில் பெருகி வருகின்றன!

மலைவையாவூருக்கும் இத்தகைய ''அருள் வாக்கின்'' ஆதாயம் கிடைத்துள்ளது! இப்போது மலைமீது கிணற்று நீர் வசதி செய்யப்பட்டுள்ளது. கோயிலுக்கு திருவோணம் தோறும் பக்தர்கள் வரத் தலைப்பட்டு, சில வளர்ச்சிகள் காண்கின்றன என்பதையும் குறிப்பிடத்தான் வேண்டும்.

திருமால் அடியான் வரவு அறிந்து, அர்ச்சகர் அகமகிழ்ந்து வரவேற்றார். இரவு தங்க இடமளித்தார். கோடையானதால் வாசல் திண்ணைகள் வசதியாக அமைந்தன.

காலை எழுந்து அடியார்கள் மலையடிவாரக் குளத்தில் நீராடி, தூய ஆடை உடுத்தித் திருமண் அணிந்து, அநுஷ்டானம் முடித்து பக்தியுடன் மலையேறினர்.

செங்கல்பட்டிலிருந்து, பொங்கல் தளிகைக்காக, அன்பர் கொணர்ந்த பொருட்களை, அமுதாக்கித் தர ஆளில்லை என்றார் அர்ச்சகர்.

திருமால் அடியானுக்குக் கோயில் தளிகையில் பயிற்சி உண்டு. வாய்ப்பை எண்ணி மகிழ்ந்து, அர்ச்சகர் அளித்த தீர்த்த வசதி கொண்டு, அற்புதமாகப் பொங்கல் தளிகை விரைவிலேயே மணங்கமழத் தொடங்கிற்று!

சுற்றுக் கோவில் நித்தியப்படி கட்டளையும் தயாரித்து, ஆராதனத்துக்கும் பரிசாரகப் பணிசெய்து, அருளிச் செயல் கோஷ்டியையும் சிறப்புற நடத்தினர் அடியார்கள். அனுமன் கோயில் அர்ச்சகர் பகல் உணவளித்தார்.

சென்ற சில ஆண்டுகளாக கோயிலுக்கு, பல நற்பணிகளைச் செய்து வரும் அனுமத் உபசகர், மலையைத் திருமலையாக்க முயன்று, ஏற்கெனவே பெருமாள் நெற்றியில் பொலிந்த திருமண் காப்பை மாற்றி விட்டதாகப் பலர் குறை கூறினர்.

பல நல்ல செயல்கள் முடிவில் இத்தகைய குறுகிய நோக்கம் கொண்டதாக இருப்பதை எண்ணுகிறபோது மனம் வேதனைப்படுகிறது!

ஏற்கெனவே இருந்ததை மாற்றுவதற்கு இவர் கனவு கண்டால், இனியும் பல மாற்றங்களுக்கு, இன்னும் எத்தனைபேர் கனவு காண்பார்களோ !

சொரூப ஞானமில்லாதவர்களின் இத்தகைய செயல்கள் இத்துடன் நிறுத்தப்பட வேண்டும். கோயிலுக்கு வரும் சில்லரை ஆதாயங்கள் இல்லாமற் போனாலும் பரவாயில்லை. தொன்றுதொட்டு வந்த மரபை மாற்ற முற்படுவது விவேகமல்ல என்று எச்சரித்துவிட்டு திருமால் அடியார்கள் பிற்பகல் வேடந்தாங்கல் சாலை வழியாக மதுராந்தகம் புறப்பட்டனர்.

(தொடரும்)



# விஷ்ணுசக்கரம்

ராஜம் ராமஸ்வாமி

எம்பெருமான், 'காலசக்கரத்தான்' என்று நம்மாழ்வாரால் போற்றப்படுகிறுன். ஒரு விரல் நுனியில் அவன் கையில் சக்கரம் சுழல்கிறது. அவன் கைகழலா நேமியான்! சுதர்சன மகாமந்திரம் மிகுந்த வலிமை படைத்தது. சக்கரத்தின் பெருமையை ஆசிரியை இக்கட்டுரையில் ஒருவாறு விளக்குகிறுர்.

பகவானுடைய ஆயுதங்களில் மிகவும் சக்தி வாய்ந்தது சக்கரம். உலகையே சரீர மாகக் கொண்ட பரமனின் வலது திருக்கரத்தில் மிக்க தேஜஸ்ஸுடன் அமர்ந்து கொண்டு யாவருக்கும் தனது ஒப்பற்ற தர்சனத்தை அளிக்கின்றது. ஆகாச மண்டலத்தில் சூரியன் தனது பூர்ண கலைகளுடன் ப்ரகாசிப்பதை விட, பன்மடங்கு பகவானுடைய திருக்கரத்தில் ப்ரகாசித்துக் கொண்டு தன்னை வழிபடும் பக்தர்களின் விரோதிகளை அழித்து, அவர்களை நிர்பயமாகச் செய்கின்றது. பகவானை விட அவனது திருநாமம் பன்மடங்கு ப்ரபாவத்தை கொண்டது. அது போலவே அவனது ஆயுதங்களும் ப்ரபாவத்தை கொண்டவை.

மங்களமாகவும், பகவானுக்கு ஆபரணமாகவும் விளங்கும் இச்சக்கரம் என்றும் வெற்றியுடன் விளங்க வேண்டுமென்று நம் சுவாமி, நிகமாந்த மகா தேசிகன் தான் இயற்றிய ஸுதர்சன அஷ்டகத்தில்,

'சுப ஜகத்ருப மண்டன, ஸுர கண த்ராஸ கண்டன
சத மக ப்ரஹ்ம வந்தித சதபத ப்ரஹ்ம நந்தித
ப்ரதித வித்வத் ஸபக்ஷிதபஜதஹிர்புத்ன்ய லக்ஷித
ஜய ஜய ஸ்ரீ ஸுதர்சன ஜய ஜய ஸ்ரீ ஸுதர்சன'' என்று ஜய கோஷம் செய்திருக்கிறுர்.

பதினுறு திருவாயுதங்களைக் கொண்ட இவ் வாழியானை வழிபடுகிறவர்களுக்கு நிறைவேருதது ஒன்றுமேஇல்லை. அதில் வஜ்ரத்தைச் சொல்லும் பொழுது, நம் ஸ்வாமி ஷோடசாயுத ஸ்தோத்ரத்தில்,

ஆயுதாநாமஹம் வஜ்ரம்
இத்யகீயத ய: ஸ வ:
அவ்யாத க்ஷேதீச வஜ்ரோ ஸென
அததீசச்யஸ்த்தி ஸம்பவ:

கீதையில் கண்ணனுல் சொல்லப்பட்ட இவ் வாழியானுடைய இவ்வஜ்ராயுதம் நம்மைக் காத்தருளும்.

மனித வாழ்க்கையில் ஏற்படுகின்ற குறைகள் சிரமங்கள் எல்லாம் விலக சுதர்சன

ஹோமத்தை சிரத்தையுடன், நடத்தி க்ஷேமத்தை அடைகிறார்கள். சுதர்சன மந்திரத்தை ஜபித்து தீராத நோய்கள் எல்லாம் விலகி மனச்சாந்தி ஏற்படுகிறது. ஆபத் சமயத்திலிருந்து ஜீவர்களை விஷ்ணுசக்கரம் காத்து அருளும் என்பதற்குக் கஜேந்திரன் கதை கவனிக்கத்தக்கது. கஜேந்திரன் என்ற யானை தன் பரிவாரங்களுடன் மடுவில் விளையாடிக் கொண்டிருக்கும் பொழுது அந்த மடுவில் பல வருஷங்களாக வாசம் செய்யும் முதலை கஜேந்திரனின் காலை மிக்க பலத்துடன் பிடித்து தண்ணீருக்குள் இழுக்க, யானை தன் காலை முதலையின் வாயிலிருந்து விடுவித்துக் கொள்ளத்தனது சக்தியைப்ரயோகிக்க,முடிவில் ஒன்றும் முடியாமல்போகவே தன்னைக்காப்பாற்ற 'ஆதி மூலமே' என்று பகவானை நினைத்து அலறியது. கஜேந்திரனின் கூக்குரலை கேட்ட பகவான் முதலில் வேகம் பொருந்தினதும்,துஷ்டர்களை நிக்ரஹம் பண்ணக்கூடியதுமான ,தனது சக்ராயுதத்தை அனுப்பி முதலையை நிக்ரஹம் செய்தான். யானையும் தானாக விடுதலை அடைந்தது. பரமனும் கருட வாகனத்தில் காட்சி அளித்து அருள் புரிந்தான்.

மகத்தான அநுக்ரஹத்தை ஜீவர்களுக்கு அளிக்கின்றசக்கரத்திற்கு பெரியாழ்வாரும்,

'வடிவார் சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு' என்று உள்ளம் குளிர பரமனது சுடராழிக்கும் பல்லாண்டு பாடி இருக்கிறார்.

ஊற்றமுடையதாய், தேஜோமயமாக எழுந்தருளி இருக்கும் விஷ்ணு சக்கரத்தை ப்ரதிதினமும் ப்ரார்த்தித்து வந்தால் எல்லாருக்கும் ஸகலக்ஷேமத்தையும் அளிக்கும்.



## உங்களுக்குத் தெரியுமா?

ஆர். ரங்கராஜன்

(1) திருவாழி திருச்சங்கு என்பவை யாவை?

(2) 'ததாஸ்து' என்று வைதிகர்கள் சொல்வதன் பொருள் என்ன?

(3) இராமாநுசரின் திருவாராதன மூர்த்தி யார்?

(4) 'கிருதக்ஞதை' என்பது என்ன?

(5) 'திருக்கைத்தலம்' என்றால் என்ன?

(6) உபய விபூதிகள் யாவை?

(7) உபய வேதாந்தம் என்பது என்ன?

(8) இராமாநுசருக்கு உடையவர் என்ற பெயர் கொடுத்தவர் யார்?

(9) திருவேங்கடமுடையானைப் பாடாத ஆழ்வார் யார்?

(10) 'கலியும் கெடும்' இது யார் கொடுத்த குரல்?

(விடைகள் வேறு பக்கத்தில்)

## ஸ்ரீநிவாஸருக்கு மண்டபம்

சென்னை-காஞ்சி இடையில் படப்பை வழியில் உள்ளது, நரியம் பாக்கம். படைப்பைக்கு மூன்று கி. மீ. தொலைவில் உள்ள இவ்வூரில் ஸ்ரீநிவாஸப் பெருமாள் கோயில் கொண்டுள்ளார்.

கோயிலின் முன் மண்டபத் திருப்பணி இப்போது ஆரம்பமாகியுள்ளது. இத்திருப்பணியில் பங்கு கொண்டு ஸ்ரீ நிவாஸப் பெருமாள் அருளுக்கு இலக்காகுமாறு ஆஸ்திகப் மக்களை பணிவுடன் வேண்டுகிறோம்.

நன்கொடை அனுப்பவேண்டிய முகவரி : புலவர் ஏ. பரந்தாமன் எம். ஏ, நம். 5, மூன்றாவது தெரு, மேத்தாநகர், சேலையூர், அஞ்சல், தாம்பரம் 600 073.

# கண்ணு உலகோர் குருவே சரணம் !

(வடமொழி சுலோகத்திலிருந்து தமிழாக்கம்)

—கவிமாமணி ஜயாறப்பன்

1. வாசு தேவரின் மகனுய் வந்தாய்
வானவ சாணுர கஞ்சனை வென்றுய
கர்சினி மீது தேவகி மகிழ்ந்தாள்
கண்ணு உலகோர் குருவே சரணம்.

2. நீலக் குவளைப் பூநிறம் கொண்டாய்
நேரிழை மாலை மகுடம் அணிந்தாய்
காலில் நூபுரம் அசைய நடந்தாய்
கண்ணு உலகோர் குருவே சரணம் !

3. நெற்றியில் சுருளும் கேசம் இலங்கும்
நிலவொளி வதனம் எங்கும் விளங்கும்
கற்றைக் குழலிடைக் காதணி அசையும்
கண்ணு உலகோர் குருவே சரணம்

4. மலர் மந்தாரை மாலை வனப்பும்
மகிழும் சிரிப்பும் கர நான் கெழிலும்
கலாப முடியும் காண நடந்தாய்
கண்ணு உலகோர் குருவே சரணம் !

5. நெய்தல் தாமரைக் கண்ணெளி அழகே
நீல நெடுங்கடல் தோன்றிய முகிலே
கைக் கோல் உடையாய் யாதவ மணியே
கண்ணு உலகோர் குருவே சரணம் !

6. அருகில் ருக்மிணி தேவி இருந்தும்
அணிவது பீதாம் பரமாயிருந்தும்
கருந்து ளவத்தை ஏன் மாலையு கந்தாய்
கண்ணு உலகோர் குருவே சரணம் !

7. கோபியரோடே கொட்டம் அடித்தாய்
குங்குமம் மேலே பூச மகிழ்ந்தாய்
காவியம் ஏன் உனைச் சீதரன் என்னும்
கண்ணு உலகோர் குருவே சரணம் !

8. உலகம் யாவையும் தனக்குள் அடக்கி
ஒவ்வோர் அணுவிலும் தன்னை ஒடுக்கி
கலமாய்ச் சக்கரம் சங்கம் எடுத்தாய்
கண்ணு உலகோர் குருவே சரணம்!

9. கண்ணன் பெருமை காட்டிய செய்யுள்
புண்ணியம் சேர்க்கும் புகழை அளிக்கும்
பண்ணிய பாவம் பலப்பல கோடி
திண்ணம் அகற்றும் சேமம் விளைக்கும்.

## உங்களுக்குத் தெரியுமா ?

### விடைகள்

(1) திருவாழி என்பது விஷ்ணுவின் கையில் உள்ள சுதர்சனம் என்னும் சக்கரம்; திருச்சங்கு பாஞ்சசன்யமென்னும் சங்கு.

(2) 'ததாஸ்து' 'அங்ஙனமே ஆகுக' என்பது இதன் பொருள். 'ஆமென்' என்று பிற மதத்தவர் குறிப்பதும் இதனையே.

(3) இராமாநுசரின் திருவாராதன மூர்த்திபேரருளாளன் (கஞ்சிவரதராஜன்)

(4) 'கிருதக்ஞதை' என்பது நன்றி உணர்வு.

(5) திருக்கைத்தலம் கையையே இருப்பிடமாகக் கொண்டு எம்பெருமானைக், கையில் எழுந்தருளச் செய்தல். திருவல்லிக்கேணியில் மணவாள மாமுனிகள் சாற்றுமறையன்று காலையிலும் திருக்கண்ணபுரம் ஸ்ரீ சௌரிராஜப் பெருமாள் கோயிலில் ஒவ்வொரு அமாவாசையன்றும் உற்சவங்களின் போதும்கைத்தல சேவை நடைபெறுகிறது.

(6) உபய விபூதிகள் என்பவை மண்ணுலகும், வைகுந்தமும்.

(7) உபய வேதாந்தம் என்பவை வடமொழி வேதமும், தமிழ்மறைகளுமாகும்.

(8) இராமாநுசருக்கு 'உடையவர்' என்றவிருது ஸ்ரீரங்கநாதனுல் அளிக்கப்பட்டது. உபயவிபூதிகளுக்கும் அவர் தலைவர் என்று பெருமை சேர்த்தார் பெருமாள்.

(9) திருவேங்கடமுடையானைப் பாடாத ஒரே ஆழ்வார் தொண்டரடிப் பொடியாழ்வார்.

(10) கலியும் கெடும் இது திருவாய்மொழியில் நம்மாழ்வார் 'பொலிக பொலிக' என்ற பதிகத்தில் கொடுத்த குரலாகும்.




# கலியனும் கண்ணனும்

ஏ. பரந்தாமன் எம். ஏ.

திருமங்கை மன்னன் ஆழ்வார்களுள் கடைக்குட்டி, நம்மாழ்வார், திருவாய் மொழியில் 'கலியும் கெடும் கண்டு கொண்மின்' என்று, ''பொலிக பொலிக!'' என 'பல்லாண்டு' பாடியதற்கு ஏற்ப விளங்கினர் திருமங்கையாழ்வார்! ஆதலால் இவரை 'கலிகன்றி' என்பர். தாம் வலிமை மிக்கவராய், தம்முடன் மறக்குலத்தவர் பலரையும் சிஷ்யர்களாய்க் கொண்டவர். ஆதலின் ''கலியன்'' அதாவது வலியன் என்று அழைக்கப்பெற்றார்.

ஸ்ரீரங்கத்தில், ரங்கநாதனுக்கு கோபுரம், மதில்கள் கட்டி திருப்பணிகள் செய்தார் கலியன். திருப்பணிக்குப் பணம் தேவை. என்ன செய்வது? தோலா வழக்கன், நீர்மேல் நடப்பான், தாள் ஊதுவான், நிழலில் ஒதுங்குவான் போன்ற தம் சிஷ்யர்களோடு ஆலோசித்தார்.

ஆசையை அறவே துறக்கச் சொன்ன புத்தருக்கு, அவரது சிஷ்யர்கள் தங்கத்தாலேயே உருவச் சிலைகள் அமைத்து நாகப்பட்டினம் போன்ற இடங்களில் ''நாத்திக பூஜை'' செய்து வந்தனர். இதனை அறிந்த கலியன் நாத்திகருக்கு சிலை ஏன்? அதுவும் தங்கமாய் இருக்க வேண்டுமா? தேவையில்லை என எண்ணினர்.

அடியார்களுக்கு முகம் காட்டத் தன்னைத் தாழவிட்டு, அரங்கத்தில் பள்ளிகொள்ளும் அரங்கனுக்கே, மதிலும் கோபுரமும் தேவை என்று கலியன் கருதினர். உடனே தம் சிஷ்யர்களோடு சென்று நாகையில் யந்திர அமைப்பின் பாதுகாப்பில் இருந்த புத்தர் சிலையை அரும்பாடுபட்டுக் கொணர்ந்தார்.

வாளைக் காட்டித் திருமாலிடமிருந்து, மந்திரம் பெற்ற மறவரல்லவா? குல முறைப் படி விரும்பியதை வன்முறையில் பெறத் தயங்கவில்லை. தாம் கொண்டுவந்த பொன்னுலான புத்தர் விக்கிரகத்தை, ஊரார் அறியாவண்ணம் இரவோடு இரவாக திருக்கண்ணன்குடி சேற்று வயலில் புதைத்தார். களைப்புத் தீர ஒரு புளிய மரத்தடியில் படுத்தார்.

## உறங்காப்புளி

புளிய மரத்தை நோக்கி ''ஏ மரமே என் கண் உறங்கினுலும் நீ உறங்காதே'' என்று ஆணையிட்டு தாம் தூங்கிவிட்டார்.

ஆழ்வார் சிறப்பு உணர்ந்த அந்த மரம் உறங்கவில்லை. அதற்கு ''உறங்காப்புளி'' என்ற புகழ்ப் பெயர் இன்றளவும் வழங்குகிறது.

பொழுது விடிந்ததும், நிலத்தை உழுவதற்கு வயலாளி வந்தான்; ஏர் பூட்டினன்.

இதைக்கண்ட கலியன் ''நிறுத்து!'' என்றார். உழவன் திகைத்தான். யாருடைய நிலம்? என்று கேட்டார் கலியன். என்னுடையது' வேண்டுமானுல் சான்று இதழ்களைக் காட்டுகிறேன் என்றான் உழவன்.

இதற்குள் ஊர் கூடிவிட்டது. நில உரிமைக்குச் சான்று காட்டினன் உழவன். ஆழ்வாரோ, தம்மிடம் செப்புப் பட்டயம் உள்ளதென்றும், அது ஸ்ரீரங்கத்தில் இருப்பதால்,சென்று எடுத்து வர அன்றைப்பொழுது வரை நிலத்தை உழாமல் நிறுத்தி வைக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார். ஊரார் அப்படியே என்று தீர்ப்பு அளித்து உழவனை வீட்டுக்கு அனுப்பி வைத்தனர். இதற்குள் உச்சிப்போதாகிவிட்டது.

கடும் வெயிலில் கலியன் களைத்துப் போனார். பசி தாகம் மேலிட்டு அருகிருந்த கோயில் கிணற்றடிக்குச் சென்றார். ஒரு பெண் நீர் எடுக்கும் குடத்துடன் அங்கு நின்றாள்.

''குடத்தைக்கொடு நீர் அருந்திய பின் திருப்பித் தருகிறேன்'' என்றார் கலியன்.

''சொந்தமில்லாத நிலத்துக்கு வாதாடியதுபோல், குடத்துக்கும் உரிமை கொண்டாடுவீர். கொடுக்க முடியாது'' என்றாள் அந்தப் பெண்.

## ஊருக்கிணறு

''அப்படியா? கிணறு இருந்தும் என் தாகம் தீரவில்லை என்றால், இதில் நீர் சுரப்பானேன்?'' என்று கோபத்தோடு கேட்டார் ஆழ்வார்.

கிணற்றுநீர் எல்லாம் வற்றிவிட்டது. ஊற்றுக்கண் மறைந்து, அது 'ஊருக்கிணறு. என்று இன்றளவும் பெயர் பெற்றுவிட்டது!

ஊருக்கிணற்றடியில் ஒரு மகிழமரம் நிழல் நிறைந்து பூத்துக் குலுங்கியது. அதனடியில் சற்றுக் கண் அயர்ந்தார் ஆழ்வார். பசியும் தாகமும் அவரை வாட்டின.

கோயிலின் உற்சவர் தாமோதரன் ஓர் அந்தண வடிவெடுத்தார். சோறும் நீரும் கையில் ஏந்திவந்து படுத்திருந்த கலியனைக் கூவி எழுப்பி ''இங்கே யார் படுத்திருப்பது?'' என்று கேட்டான்.

கண் விழித்த கலியன் ''அடியேன், வழிப் போக்கன்; பசி தாகத்தால் களைத்துப் படுத்து விட்டேன்'' என்றார்.

முதலில, ''இந்த சோற்றைத் தின்று, நீரைக் குடியும்'' என்று கொடுத்தான் அந்தண வடிவில் வந்த தாமோதரன்.

## காயா மகிழ்

நிழல் தந்து, நீர் வழங்கி, சோறு ஊட்டிய அந்த இடத்தையும் வந்த அந்தணரையும் வாயார வாழ்த்தினார் கலியன். அவர் வாழ்த்தி முடியுமுன்பே இறைவன் அவர் கண் எதிரில் மறைந்தான்.



இதற்குள் மாலையும் வந்தது. கோயிலுள் நுழைந்தார் கலியன். திருக்கண்ணன்குடி கோயிலில் எழுந்தருளியுள்ளவனே அன்று ஆய்ச்சி வெண்ணெய் திருடிய கள்வன் கண்ணன்—சாம மேனிப் பெருமான்—என்பது உணர்ந்தார். உற்சவர் தாமோதரனே தமக்கு நீரும் சோறும் வழங்கினார் என்பது அறிந்தார். திருமாலின் அவதாரச் சிறப்புக்களை வரிசையாக வைத்து ஒரு பதிகம் பாடி மகிழ்ந்தார். அன்று முதல் ஆழ்வார் அருளால் மகிழ மரம் ''காயா மகிழ்'' என்று சிறப்புற்றது. அம்மரம் காய்ப்பதில்லை.

இந்த அற்புதங்கள் நிகழ்ந்து நள்ளிரவாயிற்று. ஆழ்வார் தாம் வந்த பணியை நினைவு கூர்ந்தார். வயலில் புதைத்த பொன் விக்ரகத்தை அகழ்ந்து எடுத்து சிஷ்யர்களோடு, ஸ்ரீ ரங்கம் நோக்கி இரவோடு இரவாக ''ஆடல் மா'' எனும் குதிரை மீதேறிச் சென்றார்.

வழியில் விக்கிரகக் கடத்தல் திருடர்களை வழி மறித்தான் ஒரு ஊர்க்காவல் தலையாரி.

''நள்ளிரவில் பயணம் செய்வது யார்?'' என்று அதட்டினான் தலையாரி வடிவில் வந்த 'பலே திருடன்!'

'அப்பா! நான் வழிப் போக்கன் ஸ்ரீரங்கம் கோயில் பணி காத்திருக்கிறது. விரைவாகவும் களைப்பின்றியும் செல்ல இரவில் போகிறேன்'' என்றார் கலியன்.

ஆழ்வாரின் திருப்பணி விரைவை நோக்கிய, தலையாரி வேறு யாருமல்லன் அன்று பெண்ணையும் வெண்ணையும் களவு கண்ட பெருந்திருடன் கண்ணனே.

ஆழ்வாருக்கு ஆழிசங்கத்துடன் காட்சியளித்து ''ஆழ்வீர்! தொடங்கிய திருப் பணியை இடையூறின்றி இனிது முடிப்பீராக! என்று அருளி மறைந்தான் திருமால்!

திருக்கண்ணன் குடி, ஐந்து கிருஷ்ண அரண்ய க்ஷேத்திரங்களுள் ஒன்று. மூலவர் லோகநாதன், சியாமளமேனிப் பெருமாள். உற்சவர் தாமோதரன் தாயார் அரவிந்தவல்லி, உத்பலாவதக விமானம் சிரவணபுஷ்கரிணி, மகிழமரம் தலவிருட்சம்.

கலியன் ஒலிமாலை (பெரியதிருமொழி) 9-1 பதிகம் பெற்ற திவ்விய தேசம். உறங்காப்புளி, ஊருக்கிணறு, காய மகிழ் இவைகளை நினைத்தால் கலியனும் கண்ணனும் காட்சியளிப்பர் அல்லவா?

# திருக்கோவலூர் திருமால் விழா

—இரா. சுராஜ்

கடந்த 31-10-87, 1-11-87 இரு நாட்களிலும், நடுநாட்டைச் சேர்ந்த திருக்கோவலூரில் தென்னிந்திய ஸ்ரீ வைஷ்ணவ கலாசார மாநாடு மிகவும் சிறப்பாக நடைபெற்றது. நூற்றுக்கணக்கான திருமாலடியார்கள் நெற்றியில் திருமண்ணுடனும் வைணவச் சின்னங்களுடனும் இரு நாட்களும் ஊரில் வலம் வந்து இது வைணவ ராஜ்ஜ தானியோ என்று மக்கள் எண்ணச் செய்தனர். ஸ்ரீமத் எம்பெருமானார் ஜீயர் தலைமையிலும், சித்திரகூடம் பேராசிரியர் திரு. ஏ வி ரங்காசாரியார் வழி காட்டுதலிலும், பல பெருமக்கள் ஆதரவிலும் மாநாடு சிறப்பாக நிறைவேறியது.

3 -10-87ல் ஸ்ரீ. இராஜகோபாலராமானுஜ சுவாமிகள் கருடக்கொடி ஏற்றுவிக்க மாறன் மலரடி சுவாமிகள் திருமால் வணக்கம்பாட, ஸ்ரீ. ரவி சந்திர ஆனந்த ரங்கம்பிள்ளை வரவேற்புரை நல்க, ஸ்ரீமத் எம்பெருமானார் ஜீயர் சுவாமிகள் நல்வாழ்த்துக்குப் பின் ஸ்ரீ ப. ல. இராமானுஜஸ்வாமிகள் தலைமை ஏற்க, ஸ்ரீ உ. வே. வி. என். கோபால தேசிகன் ஸ்வாமி தொடக்க உரை நிகழ்த்த, டாக்டர் ஸ்ரீ. கே. ஏ. மணவாளன் ஒழிக்க ஒழியா வைணவம் என்பது பற்றியும் டாக்டர் கே. கே. ஏ. வெங்கடாச்சாரியார் ஆகமங்கள் என்பதுப் பற்றியும் சிறப்புரைகளாற்றினர்.

அன்று பிற்பகல் நிகழ்ச்சிக்கு ஸ்ரீ. என். கோவிந்தசாமிபிள்ளை, திருமங்கை மன்னன் திருக்கோயில் தக்கர் தலைமை தாங்கிப் பேசுகையில் வைணவத்தில் காலத்தைக் கருதி மேற்கொள்ள வேண்டிய ஆணுகுமுறைகளைச் சுட்டிக் காட்டினார்.

புதுவை ஸ்ரீ. கோ. கிருபாநிதிப்பிள்ளை தொடக்க உரை ஆற்ற உரைக் கோவை ஆரம்பமாகியது.

வைணவ உலகு நன்கறிந்த ஸ்ரீ. கி. சடகோபன் அருளிச் செயல் அனைவர்க்கும் என்ற தலைப்பில் பேசினார். வழக்கமான ஈர்ப்பு அன்று அவரது உரையில் காணப்படவில்லை. இந்த இளைஞர், இன்னும் பழைமையிலேயே ஊறியவராக முன்னேற்றக் கருத்துக்களுக்கு முகம் கொடாதவராகவே இருந்து வருகிறார். நாடு இவரிடம் இன்னும் மாற்றத்தையும், எழுச்சியையும் எதிர்பார்க்கிறது. ஸ்ரீ. ஆர். ராஜ கோபாலாச்சாரியார் வியாக்கியான சக்கரவர்த்தி, பற்றிப் பேசினார். புரட்சி வைணவம் பற்றி திருமால் அடியார் குழாம் செயலாளர் பேச்சு விறுவிறுப்பாக அமைந்தது. திரு ஏ. பரந்தாமன் 'பெருந்தமிழன், பற்றிச் சிறப்பாக உரையாற்றினார்.

ஸ்ரீ. பி. ராமசந்திரன் 'மங்கை பாகன்' என்ற தலைப்பில் பிள்ளைப் பெருமாளையங்காரை நினைவு கூர்ந்தார்.

டாக்டர் மதி. ஸ்ரீநிவாசன் பொலிக! பொலிக! பொலிக! என்ற தலைப்பில் உரையாற்றிய போது, பழைமைவாதிகளிடத்து அவரது பயமும், புரட்சி வைணவ நண்பர்களிடம் அவரது ஈடுபாடும் வெளிப்பட்டன. 1-11-87 ஞாயிறு காலை, ஸ்ரீமந் எம்பெருமானார் ஜீயர் தலைமையில் நடைபெற்ற திரு வீதி வலம், ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ரநாம பாராயணத்துடன் நடைபெற்றது.

காலை நிகழ்ச்சிகள் ஸ்ரீ எம்பார் திருவேங்கடாச்சாரியார் திருமால் துதியுடன் தொடங்கின. ஸ்ரீ பரிமள ரங்கராஜன் வரவேற்புரை வழங்கினார். புதுவை அரசு செயலர் ஸ்ரீ. ஆர் எஸ் சாரியார் இ. ஆ. ப. வின் அடக்கமான வடிவமும், ஆழ்ந்த வைணவ ஈடுபாடும் அனைவரையும் கவர்ந்தன. ஆனால், வைணவத்தில் மறுமலர்ச்சி பற்றி அவர் சிந்திக்கவில்லை என்று தோன்றியது.

அலங்காரம்தேவராஜய்யங்கார் தமிழர் மதம் பற்றிச் சங்க நூல்களிலிருந்து ஆதாரம் காட்டி நல்லதோர் உரையாற்றினார்.

உரைக் கோவையில் திருமால் ஆசிரியர் செந்தமிழ் வேதியர், ஸ்ரீ சே. ரா. அவர்கள் நடந்து நான் கண்டு கொண்டேன் என்ற தலைப்பில் உரையாற்றி, வைணவத்தின் வளர்ச்சிக்கு 'ஒரு தலை ஆணை' அவசியம் என்பதனை வலியுறுத்தினர்.

ஸ்ரீ. என் வேணுகோபால நாயக்கர் 'கொற்றவன் நான்' என்ற தலைப்பில் உரையாற்றினர். கம்பனின் வாமனுவதார உபந்யாஸமாகவே அது அமைந்தது. சர்வோதய சேவகர் ஸ்ரீ பெரிய அரையர்சுவாமி, ஸ்ரீமான் ஸ்ரீராமுலும்தசிகன் ஆகியோர் உரையுடன் காலை நிகழ்ச்சி முடிவுற்றது.

பிற்பகல் நிகழ்ச்சியை நாவலர் பொன்னடி ஸ்ரீமான். ப. சீனிவாசம்பிள்ளை தொடங்கி வைத்தார்.

ஆழ்வார்திருநகரி பேராசிரியர் ஸ்ரீ. வைத்தமாநிதி வைணவம் தொண்டு நெறி என்ற தலைப்பில் பேசிய உரை இம்மாநாட்டிலேயே குறிப்பிடத்தக்கதாகும்.

மேல் கோட்டை ஸ்ரீ M.A. லக்ஷ்மி தாதாசார்ஸ்வாமி வர இருக்கும் ஸ்ரீ ராமானுஜர் திரைப்படத்தில்இராமானுஜராகத்தோன்றுபவர். வைணவப் பொலிவு, புன்னகை மாறு வதனம் அதனுடன் கர்நாடகத்தில் கண்ணன் நெறி பற்றிய அவரது பேச்சு, அவரது ஆராய்ச்சித் திறமையைக் காட்டியது. ஸ்ரீ உ.வே. அலங்கார அரையர் ஸ்ரீராமசர்மா எண் திசை உடையவர் என்கிற தலைப்பில் பல செய்திகளை வெளியிட்டார்.

பின்னர் துவங்கிய கவி அரங்கம் மாநாட்டுக்கு இலக்கிய அந்தஸ்தையே அளித்தது. புதுவை நாவலர் சபைத்தலைவர் ஸ்ரீ. மு. ராதாகிருஷ்ணன் தலைமையில் வைணவம் நேற்று இன்று-நாளைஎன்றதலைப்பில் மதுராந்தகம் ஸ்ரீ. எஸ். ரகு வீரன், ஸ்ரீ. ஆசுகவி ஆராவமுதன் ஸ்ரீ. அருட்கவி கோசகன் ஆகியோர் பாடி மகிழ்வித்தனர். இந்தக்கவி அரங்கக் கவிதைகளை 'திருமாலில்' பகுதி பகுதியாக வெளியிட முயல்கிறோம்.

மாநாட்டில், திவ்ய தேசம் பொலிவுறச் செய்தலுக்காக மேல் பாப்பனப்பட்டு ஸ்ரீ. ஆர். ராஜ கோபாலநாயுடு, திவ்யப்ரபந்தம் பாப்புதலுக்கென ஸ்ரீ உ.வே. எம்பார் திருவேங்கடாசாரியார், திவ்ய சூக்திகளைப் பரப்புதலுக்காக புத்தூர் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், வைணவம் தழைக்கத் தொண்டாற்றலுக்காக ஸ்ரீ. ப. ல. இராம இராமானுஜசுவாமிகள் ஆகியோருக்குப் பாராட்டு வழங்கி ஸ்ரீ எம்பெருமானுர் ஜீயர் மங்களா சாஸனம் செய்தார்.

மாநாட்டின் தீர்மானங்களை ஆர். சுந்தர ராஜலு சுவாமிகள் படித்தார். ஸ்ரீ டி. ஜி. ரங்கன் நன்றியுரையுடன் மாநாடு நிறைவுற்றது.

இம் மாநாட்டில் முதல் நாள் இரவு ஸ்ரீ பக்தவத்ஸலம் தலைமையில், கூடிய அனைவர்க்கும் சத்தர்ப்பம் தந்து நடைபெற்ற கருத்தரங்கு இரவு 12 மணிக்கு மேலும் நடைபெற்றதும், வைணவ வளர்ச்சியில் அக்கறையும் ஆர்வமுமுடைய பாகவதர்களின் உரைகளும் மறக்க முடியாதவை. மாநாட்டு நிகழ்ச்சிகளையெல்லாம், ஒன்று விடாமல் குறிப்பிட்டு, வந்தோர்க்கெல்லாம் ஒவ்வொரு பகுதியிலும் கவிதைகளால் சீர்பாடல் பாடிய ஆசுகவி ஆராவமுதனின் கவிதைத் தொண்டு மறக்க முடியாததாகும்.

இந்த மாநாட்டின் உருப்படியான பயன் வைணவர்களை ஒன்றுபடுத்த ஒரு தலைமை அமைப்பு உருவாகியுள்ளதுதான். எல்லா வைணவ அமைப்புக்களையும் ஒருங்கிணைத்து இது நன்கு செயல் படுமானல் நாட்டில் புதிய வைணவம் பூத்துக்குலுங்கும்.

எப்பெருமான் அருளால் இந்த அமைப்பு விரைவில் செயல்படத்துவங்குவதாக!

### மாநாட்டுக் கருத்தரங்கில் வெளியிடப்பட்ட கருத்துக்கள்

1. பல ஊர்களில் வைணவம் வளர்க்க முன்னோர்கள் கட்டி வைத்த பஜனை மடங்கள் செயல்படவில்லை. அவற்றை மீண்டும் செயல்பட வைக்க வேண்டும்
2. திருப்பாவை, திருப்பல்லாண்டு, திருமாலை போன்ற நூல்களை சிறு வெளியீடுகளாக வெளியிட்டு வைணவச் சிறுவர் சிறுமியர்க்குக் கற்பித்து, அவர்களுக்கிடையில் போட்டிகள் நடத்திப்பரிசு வழங்க வேண்டும்.

3. வைணவக் குழந்தைகளின் பெயர்கள் திருமால், திருமாலடியார், ஆசாரியர்களின் திருப்பெயர்களாகவே இருத்தல் வேண்டும். பெற்றோர் கடமை இது.

4. வைணவ உபந்யாஸகர்களின் பட்டியல் தயாரிக்கப்பட வேண்டும்.

5. வைணவப் பெரியோர்களின் உரைகள் பாடல்கள் டேப் செய்யப்பட்டுநாடெங்கும் பரப்பப்பட வேண்டும்.

6. வைணவர்கள் வைணவர்களாக இருக்க மாவட்ட, தாலூகா அளவில் கூட மாநாடுகள் கூட்டப்பட வேண்டும்.

7. வைணவ அமைப்புக்களை ஒன்றிணைக்க ஒரு மத்திய அமைப்பு தோற்றுவிக்கப் பட வேண்டும்.

8. வைணவ சம்பிராதாய நூல்கள் அனைத்தும் அடங்கிய ஒரு நூல்நிலையம் அனைத்துப் பாது காக்கப்பட வேண்டும்.

9. வைணவர் இல்லங்களில் ஆழ்வார் ஆசாரியார்களது திரு நட்சத்திரங்கள் கொண்டாடப்பட வேண்டும்.

10. கவனிப்பாரற்றுள்ள திவ்யதேசங்கள், பழையகிராமப்புற ஆலயங்கள் செவ்வையாக நடைபெற, வைணவ மடங்கள், திருமாலடியார்கள் ஆவன செய்தல் வேண்டும்.

11. 'சமாச்ரயணம்'—திரு இலச்சினை முக்கியமானது. அதன் இன்றியமையாமையை வலியுறுத்த வேண்டும்.

12. வைணவ ஜனசாங்க்யை (மக்கள் தொகை) (சென்ஸஸ்) எடுக்கப்பட வேண்டும்.

13. ஒவ்வொரு ஆலயத்திலும் அந்த ஆலயப் பெயர், சிறப்பு, ஆழ்வார் பாசுர விவரம் அடங்கிய விவரப்பலகை வைக்கப் பட வேண்டும்.

14. பொது நிறுவனங்களான, வானொலி தொலைக் காட்சி போன்றவற்றில் தொகை செலுத்தியேனும், வைணவ பிரசாரம் செய்யப்பட வேண்டும்.

15. மக்கள் தொண்டே மாதவன் தொண்டு ஆதலால், அன்ன, ஆடை, தானியங்கள், மருத்துவ உதவி செய்யப்பட வேண்டும்.

16. பொது மாத இதழ், வலிவான பிரசாரத்துக்கென தொடங்கப்பட வேண்டும்.

17. வைணவ வினாவிடை நூல் ஒன்று தயாரிக்கப்பட வேண்டும்.

18. பிறமதத்தவர் போல், பல்கலைக் கழக பட்டமளிப்பு விழாவில் கலந்து கொள்ளும் மாணவர்களுக்கு 'வைணவம்' பற்றிய குறிப்பேடு இலவசமாக வழங்கப்பட வேண்டும்.

19. பழமையான வியாக்கியானங்கள் மணிப்ரவாளத்தில் உள்ளவற்றை புரியும் நல்ல தமிழில் மொழியாக்கம் செய்து நாடு நகரமும் நன்கறியச் செய்தல் வேண்டும்.

20. வைணவர்க்கிடையில் சாதி பேதங்கள், உயர்வு தாழ்வு, தலைகாட்டாது செய்தல் வேண்டும்.



## ஏன் இந்த நிலை?

**கவிஞர். ஸ்ரீ துரை**

**பல்லவி**

இல்லாத தொன்றில்லை
இருப்பினும் ஏன் இந்த நிலை?
(இல்லாத)

**அனுபல்லவி**

நில்லாமல் இழுத்தலைக்கும் நீள்வினையை ஓய-ஒரு
கல்லாக நிறுத்தும் உயர் கண்ணா உன் பெயரிருக்க (இல்லாத)

**சரணம்**

பொல்லாத மனத்தாசை புரிகின்ற மாயத்தால்
கல்லாராய் நிலைமாறிக் கற்றவரும் அறிவழிய
உள்ளூறும் ஆசைவிடற்கு உதவுகின்ற நல்லறிவாம்
கள்ளூறும் உன்கீதைக் கனிவாயின் மொழியிருக்க
(இல்லாத)

நின்நாமம் தனைக்கூற அதைக்கேட்க நினைக்காண
பொன்னாகும் திருவடிக்கீழ் புலன்மறந்து தொழுதெழவே
தன்னாலே கருணை பொங்கி தண்—நாவும் செவியிரண்டும்
கண்ணோடு கையிரண்டும் கண்ணா நீ அறிந்திருக்க
(இல்லாத)



# உசாத்திக் கொத்து

## திருச்சானூரில் திருமால் அடியார் குழாம்

திருப்பதி திருச்சானூர், ஸ்ரீ அலர் மேல் மங்கைத் தாயார் பஞ்சமி தீர்த்த வருஷோத்சவம் பத்து நாட்கள், வாகன புறப்பாடுகளுடன் வெகுசிறப்பாக நடைபெறுவது உலகறிந்தது.

உற்சவ நாட்களில் திவ்வியப் பிரபந்த வேத பாராயண கோஷ்டிகளுடன் தமிழ் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் திருமால் அடியர்கள் நூற்றுக் கணக்கில் இங்கு கூடுகின்றனர்.

பாகவத ததியாராதனையை சுமார் பன்னிரு சபையினர் நடத்தி வருகின்றனர். அவற்றுள் ஸ்ரீ அருள்மாரி இராமாநுஜ கூடம் சென்ற நான்கு ஆண்டுகளாக அடியார்களுக்கு வயிற்றுக்கு உணவளிப்பதோடு செவிக்கினிய சொாஞ்சொல் அமுதமும் படைக்கின்றனர்.

சென்ற மூன்று ஆண்டுகளாக, அங்கு திருமால் அடியார் குழாம் தலைவர் திருமால் ஆசிரியர் ஸ்ரீ உ.வே. இராமாநுஜாசாரியர் மற்றும் சில வித்வான்களுடன் சென்று சொற்பொழிவுகளை நிகழ்த்தி வருகிறார்.

இவ்வாண்டு வானமாமலை வித்வான் ஜே. சடகோபாச்சாரியாருடன் சென்று திருமால் அடியார் குழாம் மகாநாடு நடத்தினார். அடுத்த ஆண்டு முதல், ததீயாராதனை சபைகள் அனைத்தும் கூடி, சிறப்பான மகாநாடு கூட்டி ஸ்ரீவைஷ்ணவ வளர்ச்சிக்கு ஆவன செய்ய முடிவாயிற்று. முதலில் அருள் மாரி ராமாநுஜ கூட தலைவர் கே. சுந்தர ராமாநுஜதாசரும் முடிவில் செயலர் எல். சடகோப ராமாநுஜதாசரும் ஸ்ரீவில்லிபுத்தூர் ஏ. ஸ்ரீராமுலு தேசிகனும் பேசினர்.

கொடூர் ராமானந்தர் மகாநாடு அமைப்புக்கு ஆவன செய்வதாகத் தெரிவித்தார்.

## திருமால் அடியார் குழாம் முதலாழ்வார்கள், மாமுனிவிழா

மயிலை, மந்தைவெளி மாரி செட்டி வீதி ஸ்ரீ பிரசன்ன வேங்கடேசப் பெருமாள் கோயில் வளாகத்தில் 8-11-87 காலை அருளிச் செயல் வீதி வலம் நடைபெற்றது. திரு. குப்பு ரங்க ராமாநுஜதாசர் குழுவினர் கலந்து கொண்டு சிறப்பித்தனர், இளம் சிறுர்கள் பலர் நெற்றியில் திருமண்காப்பு துலங்க அருளிச் செயல் ஓதிவந்த காட்சி வீதியில் அனைவரையும் ஈர்த்தது !

காழியூர் வித்வாந் ஸ்ரீராம அயயங்கார் தலைமையில திருமலை நல்லான் கிதாசார்யன் பேயாழ்வார் பெருமையை விளக்கினர்.

கபிஸ் தலம் உ. வே. ஸ்ரீனிவாஸாசாரியார், பொய்கையாரின் நூல் சிறப்பை விவரித்தார்.

பூதத்தாரின் இரண்டாம் திருவந்தாதி நயங்களை இரா. சுராஜ் எடுத்துரைத்தார்.

மாமுனிகள் மாண்பு குறித்து குமாரவாடி சே. இராமாநுஜாசாரியர் உரை நிகழ்த்தினர்.

வித்வான் ஸ்ரீராம அய்யங்காருக்கு 'அருளிச்செயல் ரத்னம்' என்று விருதுவழங்கி திருமால் அடியார் குழாம் பாராட்டியது.

கவிஞர் ரா. பா. சாரதி, நாரணக்கவி ஆகியோர் கவிமலர் வழங்கினர்.

திருமால் அடியார் குழாம் அடுத்த விழாவை பாணன், பரகாலன் பைந்தமிழ் விழாவாகவும் நம்பிள்ளை திருநாளாகவும் சைதை, ராமாநுஜ கூடத்தில் நடத்த விஜய ராகவலு செட்டிசாரிடியின் அழைப்பை குழாம் மகிழ்ச்சியுடன் ஏற்றது.

## புவனகிரியில்

புவனகிரி ஸ்ரீ எம்பெருமானுர் தர்சன சபையின் 11-வது ஆண்டு நிறைவு விழா 4-10-87-ல், சென்னை டி. பக்தவத்ஸல ராமாநுஜதாசர் தலைமையில் வெகு சியிப்பாக நடைபெற்றது. பல அறிஞர்கள் உரையாற்றினர்.

## வந்தவாசியில்

ஸ்ரீமந் நாத முனிஸ்வாமிகள் வைஷ்ணவ சபை வந்தவாசியில் வாரந்தோறும் ஞாயிற்று கிழமை மாலையில் ஸ்ரீரங்கநாத பெருமாள் சந்நிதியில் கூடி பல அறிஞர்களைக் கொண்டு அரிய சொற்பொழிவுகளை நடத்தி வருகிறது.

நவ. இரண்டாவது ஞாயிறு 15-11-87ல் திருமால் ஆசிரியர் குமாரவாடி சே. இராமாநுஜாசாரியர் கலந்து கொண்டு ''ஆசார்ய ஹிருதயம்'' தொடர் சொற்பொழிவுக்கு முன்னுரை வழங்கினர். ஆங்கில மாதம் இரண்டாவது ஞாயிறுகளில் இத்தொடர் சொற்பொழிவு நடைபெறும்.

வாரந்தோறும் மற்றும் பல அறிஞர்களுக்கு வாய்ப்பளித்து சுற்றுக்கிராமங்களில் வாழும் திருமால் அடியார்களுக்கு அரிய தொண்டாற்றி வருகிறது இச்சபை என்பது மகிழ்ச்சியுடன் குறிப்பிடத்தக்கது.

இது போன்று மாவட்டந் தோறும் பல கிராமங்களுக்கு மையமாக சிறு நரகங்களில் திருமால் அடியார்கள் கூடி நிகழ்ச்சிகள் தொடர்ந்து நடைபெறுமாயின் ஸ்ரீவைஷ்ணவ மறுமலர்ச்சி செவ்வனே விளங்கும்.

## வேளச்சேரியில்

சென்னை வேளச்சேரியில் சேஷாத்திரி தில் அமைந்துள்ள ஸ்ரீவைஷ்ணவ ஸபா மாதந்தோறும் ஆழ்வார், ஆசார்யத் திருநாளையொட்டி அறிஞர்களின் சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்து சிறப்பாக நடத்தி வருகிறது.

இவ்வாண்டு மார்கழித் திங்களில் எல்லா ஞாயிற்றுக் கிழமைகளிலும் 25-12-87 மற்றும் 1-1-88 ஆகிய நாட்களிலும் மாலை 3-30 மணிக்கு ஸ்ரீ. உ. வே. திருநாகை வீரராகவாசாரியார் திருப்பாவை உபந்யாஸம் நிகழ்த்துவார். இடம் நம் 6 ஸாரதி நகர் வேளச்சேரி,

## கீத கோவிந்த ஸத்ஸங்கம்

ஸ்ரீ ஐயப்பன்நகர் (எ) சின்மயா நகரில் ''கீத கோவிந்த ஸத்ஸங்கம்'' அமைத்து 9—2—88 ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாய ருசி உள்ளவர்களுக்கு உறுதுணையான உணர்வுகளை ஊட்ட மாதம் ஒரு காலக்ஷேபம் நடைபெற ஏற்பாடாகியுள்ளது.

மாசிமாதம் ''முதாழ்வார்கள்'' குறித்து 'திருமால் ஆசிரியர்' உரையாற்றுகிறுர்.

## சை. ஊ. விஜய ராகவலு செட்டியார் நரசம்மாள் அறக்கட்டளை

சைதாப்பேட்டை 64, பெருமாள் கோயில் தெருவில் ஸ்ரீ விஜயராகவலு செட்டியார் நரசம்மாள் அறக்கட்டளை சார்பில் சனிக்கிழமை தோறும் 'திருமால் நெறி' சொற்பொழிவுகள் பல அறிஞர்களைக் கொண்டு நடைபெற்று வருகிறது.

நவ 14-ல் குமாரவாடி சே. இராமாநுஜாசாரியர் 'பிள்ளை உலகாசிரியர்' குறித்துப் பேசினர்.

நவ 21-ல் 'பெரிய திருமடல்' டாக்டர் மதி ஸ்ரீவைாசன் 28-ல் திருக்குறுந்தாண்டகம் இரா. சுராஜ் டிச. 5 சிறிய திருமடல் காழியூர் முடும்பை சீனிவாசவரதாச்சாரியார்; டிச. 12-ல் அமலனுதிபிரான் பற்றி திருமலை அனந்தாழ்வான் வரதாசாரியர்.

இடையில் 6-12-87 ஞாயிறு, காலை 8 மணி முதல் ''பரகாலன் பைந்தமிழ் திருநாள்'' திருமால் அடியார் குழாம் சிறப்பு நிகழ்ச்சி இடம் பெறும்.

## ஸ்ரீ நம்பிள்ளை சபை

சென்னை சிந்தாதரிப்பேட்டை, 31, உலகப்ப மேஸ்திரி தெருவில் ஸ்ரீ நம்பிள்ளை சபை சார்பில் நவ 26 தொடங்கி டிச 5 வரை திருவாய்மொழி சேவை சாற்றுமறையுடன் நப்பிள்ளை உற்சவம் நடைபெறும்.

இடையில் டிச முதல் தேதி, சாந்தி மெடிகல்ஸ் டி. பாஷ்யம் செட்டியார் உபயத்தில் திருமால் ஆசிரியர் குமாரவாடி இராமாநுஜாசாரியர் கைசிக புராண ''உபந்யாஸம் நிகழ்த்துகிருர்.

## போளூரில்

வ. ஆ. போளூர் ஸ்ரீ சம்பத்கிரி பிரம்ம பீடம் ஸ்ரீலஸ்ரீ அச்சுதானந்த சுவாமிகள் 85-வது ஆண்டு குருபூஜை விழா 20-11-87ல் சிறப்பாக நடைபெற்றது. இரவு 8 மணிக்கு ஸ்ரீ சம்பத் ராமாநுஜதாசர் பஜனை கோஷ்டியார் திவ்விய பிரபந்த பஜனை நடத்தினர். 16-12-87 முதல் 14-1-88 வரை மார்கழியில் அதிகாலை திரு. ஜி. நரசிம்மலு நாயுடு முன்னிலையில் ஸ்ரீ. கே. ரங்கநாத ராமானுஜதாசர் தலைமையில் சுப்ரபாதம், திருப்பாவை, சேவை சாற்றுமறை நடைபெறும்.

## திருமலை ஈச்சம்பாடி வரதாசாரியார் மணிவிழா

எம்பெருமானார் தரிசனத்தின் எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளில் ஈச்சம்பாடி ஜீயரும் ஈச்சம்பாடி ஆச்சானும் இடம் பெற்றனர்.

அவர்கள் வழிவந்த ஸ்ரீ உ. வே. திருமலை ஈச்சம்பாடி சடகோபாசாரியார், அண்மைக் காலத்தில் காஞ்சியில் வாழ்ந்தவர். உபய வேதாந்த நூல்களைப் பயின்று காஞ்சி பெருமாள் கோயில் அத்யாபக கோஷ்டியை அலங்கரித்தவர்.

ஸ்ரீ தேவப்பெருமாள் கோயில் மணவாள மாமுனிகள் சந்நிதி முன்மண்டபத்திருப்பணியில் முக்கியப் பங்கு கொண்டவர்.

'திருமால்' ஆசிரியருக்கும் மிக ஆப்தர் அவரது குமாரர் ஸ்ரீ. தி. ஈ. வரதாசாரியருக்கு 11-10-87 முதல் 28-10-87 வரை உபய வேதாந்த இதிஹாஸ புராண பாராயணங்களோடு ஐப்பசி பூராடத்தில் ''ஷஷ்டியப் பூர்த்தி'' நடைபெற்றது. ஸ்ரீ தேவப் பெருமாளிடமிருந்தும் மற்றும் திவ்விய தேசங்களிலுருந்தும் மரியாதைகள் வந்தன. நெய்வேலியில், திருமால் அடியார்களை பாதயாத்திரைப்போது வரவேற்று உபசரித்தவர் இந்த ஸ்வாமி என்பதும் நன்றியுடன் குறிப்பிடத் தக்கது.

## செய்யூரில்

கடுக்கலூர் திருமாலடியார் அருள்நெறி மன்ற சார்பில் 6-11-87ல் இலவச உரை நிகழ்ந்தது. ஸ்ரீ ரகுநாத ராமானுஜதாஸர் தலைமையில் அருளிச் செயல் இசை இடம் பெற்று, மன்றத்தினர் பாராட்டினர்.

## மதுரையில்

மதுரை ஐக்கிய வைஷ்ணவ சபை சார்பில் மாமுனிகள் விழா 27-10-87ல் ஸ்ரீ. டி. ராமஸ்வாமி அய்யங்கார் தலைமையில் ஸ்ரீரங்கம் வித்வான். ஆர். நரசிம்மாசாரியர் உபந்யாஸத்துடன் சிறப்பாக நடைபெற்றது.

## காரமடையில்

காரமடை ஸ்ரீவைஷ்ணவ பிரசார ஸபையின் 27வது கூட்டம் 8-11-87ல் நடைபெற்றது. தேரம்பாளையம் கோவிந்த ராஜப் பெருமாள் ஸந்நிதியில் புலவர் அரங்கநாதன், தோப்புஸ்வாமி, பரகால ராமனுஜதாசர், தாஸனூர் இளையாழ்வார், முத்துக் கல்லூர் ராமாநுஜ தாஸர், ஆகியோர் உரையாற்றினர்.

## பரமபதம் எய்தினர்

சென்னை முத்தியால் பேட்டை ஸ்ரீ கிருஷ்ணன் கோயில் தர்மகர்த்தாவாயிருந்து கோயில் திருப்பணியுடன், பல வகையில் திருமால் நெறிப் பணிகளை புரிந்து வந்த அட்வகேட் பிள்ளைபாக்கம் பஹுகுடும்பி (P.B.) அனந்தாசாரியர் 15-11-87ல் ஆசார்யன் திருவடி அடைந்தார்.

வேளுக்கை ஆளரிசிங்கர் ஸந்நிதி தாயார் கருவறை, மண்டபங்கள் திருப்பணி செய்து, ஸ்ரீ. உ. வே. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்

...ய ஸ்வாமி தலைமையில் சம்ப்ரோக்ஷணத்தை சிறப்பாக நடத்தியவர்.

## கைசிகமும் திருப்பாவையும்

'திருமால்' ஆசிரியர் குமாரவாடி சே. இராமானுஜாசாரியர் இவ்வாண்டு கைசிக மகாத்மியச் சொற்பொழிவு டிச முதல் தேதி மாலை 7-30க்கு சிந்தாதரிப் பேட்டை, 31. உலகப்ப மேஸ்திரி தெரு, நம்பிள்ளை சபையிலும், டிச. 2 தேதி 7 மணிக்கு ஜவஹர் நகர், ஸ்ரீ சுந்தரராஜப் பெருமாள் சந்நிதியிலும் நடைபெறுகின்றன.

இவ்வாண்டு மார்கழி முப்பதும் 15-12-87 முதல் சென்னை அமைந்த கரை ஸ்ரீ பிரஸந்ந வரத ராஜப் பெருமாள் ஸந்நிதியில் மாலை 6.30க்கு தினம் ஒரு பாசுரமாக திருப்பாவை விரிவுரை நிகழ்த்துவார்.

## ஸ்ரீரங்கம் வைகுண்ட ஏகாதசி மகாநாடு

ஸ்ரீரங்கம் வைகுண்ட ஏகாதசி திருவத்யயன உற்சவத்தையொட்டி திருவரங்கம் கிழக்கு சித்திரை வீதியிலுள்ள ஸ்ரீ நம்மாழ்வார் ராமானுஜ கூடத்தில் வழக்கம் போல் பாகவத ததீயாராதனையுடன் சிறப்புச் சொற்பொழிவுகள் கொண்ட திருமால் அடியார் மகாநாடும் நடைபெறும்.

ஏகாதசிக்கு முன் தினமும், அன்றும், மறு நாளும் தொடர்ந்து, மூன்று நாட்கள் இம் மாகாநாடு கூடும். ஏகாதசி நாளன்று பிற்பகல் "திருமால்" ஆசிரியர் சிறப்புரை நிகழ்த்துவார்

ஸ்ரீயதே ராமானுஜாய நம:

## தமிழ்த் தலைவன் அத்யாபாக வேதபாராயண கைங்கர்ய சபா

21 கேசவப் பெருமாள் கீழண்டவீதி
மயிலை சென்னை-4.

இச்சபையின் சார்பாக 17-1-98 to 27-1-88 வரை 9 days திருநாங்கூர் கருட சேவையும் மலையாள திவ்ய தேசங்களை 14ம் மற்றும் குருவாயூர், வர்கலா பாண்டிய நாட்டு திவ்ய தேசங்கள் ஸ்ரீரங்கம் தை கருட சேவையும் சேவிக்க ஏற்பாடு செய்துள்ளோம். நபர் 1க்கு ஆகார வசதி உம் படரு 475/- யாத்ரையில் கலந்து கொள்ள விருப்பம் உள்ளவர்கள் சபையின் அலுவலகத்தில் R. ஸ்ரீனிவாசனிடம் தொடர்பு கொள்ளவும்.

---

### வரப்பெற்றோம்

## பாரதமணி

[ஆசிரியர்: பி. நா. ஸ்ரீனிவாசன்! (இளைய வல்லி) நெ. 1 படேல் தெரு நேருநகர் குராம் பேட்டை சென்னை-44.]

ஒப்பிலாத பாரத சமுதாயம் தன் ஆன்மிக கலாசாரச் சிறப்பால் உலகத்து நல் வாழ்வுக்கு உரிய வழி காட்ட வல்லது.

தெய்வபக்தியும் தேசபக்தியும் இணைந்த ஒரு கலாசாரம் காந்திய நெறியாக இங்கு பரிணமித்தது.

இன்றைய அரசியல் கட்சி அவலங்களை ஆய்ந்து காந்திய நெறியில் நல்வழிகாட்டுவதாக பாரதமணி திகழ்கிறது.

எழுத்தாளர் க. நா. சு. வின் அனுபவம் நிறைந்த அறிவு முதிர்ந்த கட்டுரை பாரத மணிக்குச் சிறப்பு கூட்டுகிறது.

நல்ல சிந்தனைக்கு ஒரு தேசியத் திங்கள் இதழ்; பாராட்டி வரவேற்கிறோம். விலை 1-50; விஷயத்தைப் பார்க்கும் போது விலை அதிகமில்லை.

—சே. ரா.

---

திருமால் அடியார் குழாம் சார்பாக 53, ஆபிரகாம் தெரு, மயிலை, சென்னை-600 004ல் இருந்து வெளியிடுபவர் : ஆசிரியர் : குமாரவாடி சே. இராமானுஜாசாரியர், அச்சிட்டோர் ஜியார் எண்டர் பிரைஸஸ் (பிரிண்டர்ஸ்), 86 ஜெனரல் பேட்டர்ஸ் ரோடு, சென்னை-600 002